# ஸன்ரைஸ் ஃப்ளாஸ்க் அன்பளிப்பு!

## இலவசம்!




**இந்த தனிச்சிறப்பான ஸன்ரைஸ் ஃப்ளாஸ்க், 6 காலியான 200 கிரா. ஸன்ரைஸ் ரீஃபில் பேக்குகளிற்கு பதிலாகக் கிடைக்கும்.**

இப்போது, உங்களுக்கு பிடித்தமான ஸன்ரைஸ் காப்பியை நீங்கள் எங்கே வேண்டுமானாலும் எடுத்துக் கொண்டு போகலாம், அதற்கே உரிய அழகான ஸன்ரைஸ் ஃப்ளாஸ்கில்! நீங்கள் செய்யவேண்டிய தெல்லாம் இவ்வளவே—6 காலியான 200 கிரா. ஸன்ரைஸ் ரீஃபில்பேக்குகளை சேர்த்து உங்களுடைய டீலரிடம் கொடுக்கவும். ஒரு வாரத்திற்குள் அவருடைய கடையில் ஒரு ஸன்ரைஸ் ஃப்ளாஸ்க் உங்களுக்காகவே காத்துக் கொண்டிருக்கும். நீங்கள் அடுத்தமுறை போகும்போது அதைப் பெற்றுக் கொள்ளலாம். விஷயம் எத்தனை எளிமையானது, பார்த்தீர்களா! ஆகவே, இன்றே உங்களுடைய ரீஃபில் தொகுப்பை சேர்க்கத் தொடங்குங்கள்.



இந்த அன்பளிப்பு பின்பக்கம் ★ இருக்கும் பேக்குகளிற்கு மட்டுமே.




**Nestlé**
# ஸன்ரைஸ்
**இன்ஸ்டன்ட் காப்பி-சிகரி ப்ளென்ட்**

முந்துங்கள் !
இந்த அன்பளிப்பு ஃப்ளாஸ்குகளின் சரக்கு தீரும்வரையே செல்லும்.

**அம்மாவின் அந்த முதல் காப்பியின் புத்துணர்ச்சியூட்டும் நறுமணத்துடன்.**

FSL-8682 Tam

ஒரு விளையாட்டு வீரரின் சோகக் கதை



# "உலகப் போட்டியில் வெறுங்காலோடு ஓடினேன்

கர்நாடக மாநிலம் கோலார் மாவட்டத்திலுள்ள முரண்டா அள்ளி என்ற கிராமத்தைச் சேர்ந்தவர் கே. நாராயணசாமி என்ற நாற்பத்து மூன்று வயதான விளையாட்டு வீரர். ஒரு சாதாரண விவசாயக் குடும்பத்தில் பிறந்ததால் அவரால் படிக்க முடியவில்லை. கழனிகளில் உழைத்து உழைத்து ஒடிசலான உடம்பு; வெயிலில் காய்ந்து கறுத்துப் போன நிறம்; அப்பாவி!

நாராயணசாமியின் தம்பி கல்லூரியில் படித்தார். அவர் விளையாட்டுகளில் சாம்பியன். அதனால் நாராயணசாமிக்கும் தனது தம்பியைப் போலவே தானும் ஒரு விளையாட்டு வீரனாக வேண்டும் என்ற ஆசை வந்து விட்டது. இருந்தாலும் படிப்பறிவில்லாத ஒரு விவசாயி எந்த விளையாட்டில் பயிற்சி பெற்று விட முடியும்? அதனால், தனது வீட்டுக்குப் பக்கத்திலுள்ள 'நேரோகேஜ்' ரயில் தண்டவாளத்தின் ஓரத்தில் ஓடி ஓடி ஓட்டப் பந்தய வீரனாகப் பயிற்சி பெறுவதுதான் அவருக்குச் சுலபமாக இருந்தது. கோச்சிங் கொடுக்க யாரும் இல்லையென்றாலும் தாமாகவே ஓடிப் பயிற்சி பெற்றார்.

விடா முயற்சியின் காரணமாகப் பல்வேறு போட்டிகளில் கலந்து கொண்டு இந்திய அளவில் மூன்று தங்கப் பதக்கங்களையும், இரண்டு வெள்ளிப் பதக்கங்களையும், கர்நாடக மாநில அளவில் ஏழு தங்கப் பதக்கங்களையும் இரண்டு வெள்ளிப் பதக்கங்களையும் பெற்றார்.

கடந்த ஆண்டு ஜப்பான் நாட்டு டோக்கியோவில் நடைபெற்ற விளையாட்டுப் போட்டியில் கலந்து கொள்ளத் தேர்வு செய்யப்பட்டார். ஆனால் என்ன காரணத்தாலோ—யாருடைய தலையீட்டாலோ'கடைசி நிமிடத்தில் நாராயணசாமியைக் கைவிட்டுவிட்டனர்.

இந்த ஆண்டு எப்படியோ — எவர் செய்த புண்ணியமோ — கடந்த ஜூன் மாதம் எட்டு, ஒன்பது ஆகிய தேதிகளில் லண்டனில் நடைபெற்ற பதினெட்டாவது உலக விளையாட்டுப் போட்டியில் பாரதத்தின் சார்பில் பங்கு கொள்ளும் இருவரில் ஒருவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

லண்டன் போய் வரப் பதின்மூன்றாயிரம் ரூபாய் தேவை. 'நாராயணசாமியிடம் பைசாக் கூட இல்லை. என்ன செய்வது என்று அவர் விழித்துக் கொண்டு நின்றபோது, கோலார் நகரிலுள்ள உள்ளூர்ப் பத்திரிகையாளர்களும், விளையாட்டு ஆர்வம் கொண்டோரும், பொது மக்களுமாகச் சேர்ந்து பதினான்காயிரம் ரூபாய் வரை நிதி திரட்டி நாராயணசாமியிடம் கொடுத்தனர். பணத்தைக் கையில் வாங்கிய போது நன்றிக் கடனில் ஆனந்தக் கண்ணீர் வடித்தார் நாராயணசாமி.

ஓர் இந்திய விவசாயியின் சீருடையான வேஷ்டி மற்றும் மேல்துண்டு ஆகியவற்றுடன் (பேண்ட், சூட் வாங்கப் பணம் ஏது?) லண்டன் மாநகருக்குப் பயணமானார் நாராயணசாமி. 'தி இந்தியன் ஃபெடரேஷன் ஆஃப் லாங் டிஸ்டன்ஸ் ரன்னர்ஸ்' மூலமாக குருராஜ் என்பவர் மேனேஜராகவும், ராகவன் என்பவர் கோச் ஆகவும் நாராயணசாமியை லண்டனுக்கு அழைத்துச் சென்றனர்.

போட்டியில் கலந்து கொள்ளச் சென்ற நாராயணசாமிக்கு வழியனுப்பு விழாவோ, பாராட்டுக் கூட்டமோ நடத்தப்படவில்லை; நடத்த ஆள் இல்லை. ஆனால் மேனேஜர், கோச் ஆகியோருக்கு மட்டும் தடபுடலான வழியனுப்பு விழா நடத்தப்பட்டது. பல்வேறு தரப்பினரும் பாராட்டுப் பத்திரம் வாசித்தார்கள்!

சரி, இவையெல்லாம் கிடக்கட்டும்! லண்டன் போய்ச் சேர்ந்ததும் என்ன நடந்தது தெரியுமா?

மருந்துக்குக் கூட ஆங்கிலம் தெரியாத நாராயணசாமியிடம் மேனேஜரும், கோச்சும் ஆங்கிலத்தில் பேசிப் பேசியே நோகடித்தனர்; கிண்டலும் கேலியும் பேசிப் புண்படுத்தினர். டிபன் மற்றும் உணவு நேரத்திலெல்லாம் நாராயணசாமியை நடுங்கும் குளிரில் வெளியில் நிற்கச் சொல்லி, அவர் குளிரால் நடுங்குவதைப் பார்த்து ரசித்துச் சிரித்துக் கலாட்டா செய்தனர்.

இது மட்டுமில்லாமல், "ஏய், நாராயணசாமி! எப்படியோ லண்டன் வந்து சேர்ந்து விட்டோம். விளையாட்டுப் பந்தயத்தில் கலந்து கொள்வதெல்லாம் நமக்கு வேண்டாம். உல்லாசமாக ஊரைச் சுற்றிப் பார்த்து விட்டுப் பிறகு இந்தியாவுக்குத் திரும்பி விடலாம். அங்கு யாராவது நம்மைக் கேட்

டால் 'போட்டியில் கலந்து கொண்டோம். பரிசுதான் கிடைக்கவில்லை!' என்று சொல்லி விடலாம்...!'' என்றும் சொல்லியிருக்கின்றனர்.

அதற்கு நாராயணசாமி, ''என்து ஊர் மக்கள் கஷ்டப்பட்டுப் பணம் திரட்டி என்னை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார்கள். அவர்களுக்கு நான் ஒரு போதும் மோசம் செய்ய மாட்டேன்!'' என்று சொல்லியிருக்கிறார்.

இந்த நிலையிலும் மேனேஜரும் கோச்சும் நாராயணசாமிக்கு எந்த உதவியும் செய்யாதது மட்டுமல்லாமல் இவரைத் தனியாக விட்டுவிட்டு எங்கேயோ ஊர் சுற்றக் கிளம்பிப் போய் விட்டார்கள்!

அகில உலகத்திலிருந்தும் சுமார் மூவாயிரம் விளையாட்டு வீரர்கள் வந்து கலந்து கொண்ட பல்வேறு போட்டிகளில் — யாருடைய உதவியுமிலலோ முதல் நாள் நடந்த பத்து கி. மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் ஓடி ஐந்தாவது இடத்தையும் மறுநாள் நடந்த இருபத்தைந்து கி. மீட்டர் ஓட்டப்பந்தயத்தில் ஓடி ஒன்பதாவது இடத்தையும் பெற்றார் நாராயணசாமி.

ஷூக்கள் ஏதும் காலுக்கு அணியாமல் அப்பந்தயங்களில் கலந்து கொண்டு ஓடியதால் கால்களில் வீக்கமும் வலியும் ஏற்பட்டுத் துடித்திருக்கிறார் நாராயணசாமி. கருணை மனம் கொண்ட டாக்டர் கணபதி என்பவர் நாராயணசாமியின் பரிதாப நிலையைக் கண்டு இறங்கி, வெந்நீர் ஒத்தடம் கொடுத்து — மருந்துகள் கொடுத்து வைத்தியம் செய்ததோடு பத்திரமாக இந்தியாவுக்கும் அனுப்பி வைத்திருக்கிறார்.

இப்போது நாராயணசாமி ஊர் வந்து சேர்ந்து விட்டார். ஆனால் அவருடன் சென்ற மேனேஜரும், கோச்சும் 8.7.85 வரை இந்தியா வந்து சேரவில்லை!

இந்த இந்திய நாட்டில் ஒருவன் ஏழையாகவும், படிக்காதவனாகவும் இருந்துவிட்டால் அவன் எப்படியெப்படியெல்லாம் அவமானப்படுத்தப்படுகிறான் — அவனுக்கு என்னதான் திறமையிருந்தாலும் அவன் எப்படியெப்படியெல்லாம் புறக்கணிக்கப்படுகிறான் என்பதற்கு நாராயணசாமி ஒரு நிகழ்கால உதாரணம். இந்தியர் அனைவருமே வெட்கப்பட்டுத் தலைகுனிய வேண்டிய ஓர் அவமானம்!

—ப. மூர்த்தி.

உதவி:
லங்கேஷ் (கன்னட வார இதழ்).

வாரம் ஒரு கடிதம்

# நண்பன்

இனிய இளைஞனே!

வாழ்க்கையைப் பற்றிய பாடங்களை அங்குலம் அங்குலமாய் அறிந்து கொண்டிருப்பவனே!

நீ தேர்ந்தெடுக்கும் நிறம் கூட உன் குணம் காட்டும்.

நீ தேர்ந்தெடுக்கும் நட்போ உன்னையே காட்டும்.

உன் நண்பர்களின் எண்ணிக்கையையும், உன் நண்பர்கள் யார் என்பதையும் நீ எப்போதாவது எண்ணிப் பார்த்ததுண்டா?

சாயங்கால சந்தோஷத்திற்குத் தோள் கொடுப்பவர்களும், திருக்கழுக்குன்றத்துக் கழுகு மாதிரி உணவருந்தும்போது மட்டும் ஆஜராகிறவர்களும், தவறுகளைக்கூட நியாயப்படுத்துகிறவர்களும்தாம் நண்பர்கள் என்றுதான் இளமையின் அகராதி எழுதுவது வழக்கம்.



ஆனால் அப்படியல்ல இளைஞனே!

பொருளாதார உறவுகளால் பின்னப்பட்டிருக்கும் நமது சமூக உறவுகளில் பணத்திற்கு உறவு கொண்டாடும் சுற்றத்தைவிட, குணத்திற்கு உறவு கொண்டாடும் நண்பர்களே நல்லவர்கள்.

பெரும்பாலும் இங்கே சுற்றம் சுகங்களில் மட்டுமே பங்கு கேட்கிறது.

நட்புதான் சுகங்களில் மட்டுமல்லாமல் துக்கங்களிலும் பங்கேற்கிறது.

நட்பு என்பது இன்பத்தை இரட்டிப்பாக்க வேண்டியது; துன்பத்தைப் பாதியாக்க வேண்டியது.

"சிலரிடம் உனது துன்பத்தைச் சொல்லாதே; அவர்கள் தரும் ஆறுதலை விட அவர்கள் அடையும் ஆனந்தமே அதிகம்" என்ற சத்தான வாசகம் சத்தியமான வாசகம் ஆகும்.

ஆனால், உண்மையான நண்பன் அடிமனத்தின் கனங்களை வாங்கிக் கொள்வதன் மூலம் நூறு மருத்துவர்கள் செய்ய முடியாத சிகிச்சையைச் செய்துவிடுகிறான்.

நட்பு என்பது அரசியல் கட்சிகள் கூட்டணி மாறுவது போன்றதல்ல.

"நட்பிலும், புத்தகங்களிலும், மதுவிலும் பழையதே சிறந்தது" என்ற பழமொழியின் முதல்இரண்டு அம்சங்கள்மட்டும் இனியவை.

ஒரு மனிதன் எப்போதுமே தன்னைத் தானே முழுமையாகப் பார்த்துக் கொள்ள முடியாது.

அதுபோலத்தான், உன்னைப்பற்றி உன்னைவிட உன் நண்பனே நன்றாக அறிந்தவன்.

போலி நட்புகள் எப்போதும் அகத்துக்குள் சென்று ஆணிவேர் பிடிப்பதில்லை.

அவை — அலையோர எழுத்துக்களைப் போல் அழிந்தே விடுகின்றன.

உதட்டில்பூக்களையும், உள்ளத்தில்புழுக்களையும் வளர்த்துக் கொண்டிருக்கிறவர்களின் நட்பு விடிவதற்குள்ளேயே வெளிச்சமாகிவிடுகிறது.

"பட்டப் பகலில் நிலவு நன்றாகக் காய்கிறதே!" என்று ஒருவன் சொன்னால், "ஆமாம், நட்சத்திரங்களும் அழகாக இல்லை!" என்பவன் நண்பனில்லை.

உனது குறைகளை உனக்குமட்டுமே சுட்டிக்காட்டி மற்றவர்களிடம் மறைத்துவிடுகிறவனே நம்பத் தகுந்த நண்பன்.

ஒரு பெண்ணிடம் கொள்ளும் காதல்கூட சதை வசப்பட்டது.

ஆனால், நட்பு என்பது முழுக்க முழுக்க மன வசப்பட்டது.

நல்ல நட்புக்குத் தேய் பிறையே கிடையாது நண்பனே!

"நட்பு என்பது மாலை நிழல் மாதிரி; வாழ்க்கைச் சூரியன் அஸ்தமிக்க அஸ்தமிக்க அந்த நிழல் அடர்த்தியாகிறது; அழகாகிறது" என்று சொன்னவனின் வாய்க்கு நான் ரேஷனில்நின்று சர்க்கரை வாங்கிப் போட வேண்டும்.

நல்ல நட்பு எது என்பதை ஆய்ந்து கொள்.

பிறகு வாழ்க்கையின் எல்லை வரை வருவதாய் — ஒரு நல்ல நட்பை நீ தேர்ந்து கொள்.

கவிஞர் வைரமுத்து

# அரசே! ஆலயங்களை விட்டு வெளியேறு!

"ஆலய நிர்வாகத்தில் முறைகேடுகள்."

"அறங்காவலர்கள் நியமனத்தில் கட்சிக் கண்ணோட்டம்."

"ஆலயப் பணத்தை வேறு பணிக்குத் திருப்பி விடுவது."

"விளக்கேற்றக்கூட வசதி இல்லாத ஆலயங்கள்."

ஏனிந்த நிலை? யார் காரணம்?

"அரசும் ஆளும் கட்சியும்தான்" என்று அடித்துச் சொல்கிறார் ஹிந்து முன்னணியின் மாநில பொதுச் செயலாளரான சிதம்பரம்.

"அரசே! ஆலயங்களை விட்டு வெளியேறு!" இந்த கோஷத்தை முன்வைத்துத்தான் எங்கள் இயக்கம் போராட்டத்தில் இறங்கி இருக்கிறது; ஆளும் கட்சிக்கு எதிரான போராட்டம் அல்ல, தர்ம நியாயப் போராட்டம். 'மதச் சார்பற்ற நாடு' என்று சொல்லிக் கொண்டு இங்கு இருக்கும் பெரும்பான்மை சமூகத்தினரின் மத உணர்வைப் புண்படுத்துவது போன்ற செயல் வேறு எந்த நாட்டிலும் நடைபெறாது" என்று ஆவேசமாகப் பேசும் சிதம்பரம் தொடர்ந்து கூறும் கருத்துக்கள்:

'இந்துக் கோயில்களை நிர்வகிக்கும் பொறுப்பை இந்துக்களிடமே விட்டுவிடுங்கள்' என்றால், 'உங்களால் நிர்வகிக்க முடியாது' என்று அரசு பதில் கூறக்கூடும். அப்படிச் சொன்னால் அது எப்படி இருக்குமெனில், வெள்ளைக்காரன் நம்மைப் பார்த்து, 'சுதந்திரம் கொடுத்தால் உங்களால் ஆட்சி செய்ய முடியாது' என்று சொன்னது போலிருக்கும்!

கோயில்களில் ஏற்கனவே ஊழல்கள் பல நடைபெற்றதால்தான் அரசு கோயில்களை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள நேர்ந்தது என்று கூறப்படலாம். இது ஓரளவுக்கு உண்மையாக இருந்தாலும் இப்போது நடைபெறும் முறைகேடுகள்; ஊழல்கள், கணக்கிலடங்காதவை. அதனால்தான் சொல்கிறோம், 'இந்துக்களே ஒரு குழுவை அமைத்துக் கொண்டு நிர்வகித்துக் கொள்கிறோம். அரசு தலையிட வேண்டாம்' என்று.

மற்ற சமூகத்தினரின் மத சம்பந்தப்பட்ட விஷயங்களில் தலையிட தைரியமில்லாத அரசு, பெரும்பான்மை மக்களின் மத உணர்வுகளோடு விளையாடிக் கொண்டிருப்பது கண்டிக்கத்தக்கது. அரசு ஒரு தேதியை நிர்ணயிக்கட்டும். மடாதிபதிகள், ஓய்வு பெற்ற உயர் அதிகாரிகள், பத்திரிகையாளர்கள், சமுதாயத்தில் நன்மதிப்புப் பெற்றோர் கொண்ட ஓர் அமைப்பை அந்தத் தேதிக்குள் அமைக்கிறோம். இதை ஒரு சவாலாகவே சொல்கிறேன்.

36000 கோயில்களை ஏற்றுக் கொண்டு செயல்படுவதாகக் கூறிக் கொள்கிறது இந்து அறநிலைய ஆட்சித்துறை. பெரும்பான்மையான கோயில்களின் நிலை என்ன?

விளக்கு இல்லை.

வழிபாடு இல்லை.

அர்ச்சனை இல்லை; அபிஷேகம் இல்லை.

சிலைகள் திருட்டு.

பல லட்சம் ஏக்கர் நிலங்கள் குத்தகைப் பணத்தைச் செலுத்தாத நபர்களின் கையில்.

பலகோடி நகைகள் ஒரிஜனல்தானா? என்று சந்தேகம் எழுந்துள்ளது.



---

* திரு சிதம்பரம், மாநில பொதுச் செயலாளர், ஹிந்து முன்னணி.



• மதுரையில் அண்மையில் நடைபெற்ற விசுவ ஹிந்து பரிஷத் மாநாட்டில் மடாதிபதிகள், துறவியர், ஆன்றோர் பங்கேற்றனர். ஹிந்து ஆலயங்களை நல்ல முறையில் நிர்வகிக்கத் தனித்தியங்கும் வாரியம் ஒன்றை அமைக்க வேண்டும் என்று மாநாடு கருத்து தெரிவித்துள்ளது.

வைர வேலைக் காணோம் என்று புகார்.

கோயில்களுக்குச் சொந்தமான சந்தனக் கட்டைகளைக்கூட விட்டு வைக்கவில்லை!

நிர்வாக அதிகாரியை கையில் போட்டுக் கொண்டு குறைந்த வாடகையில் கோயில் நிலங்களையும், வீடுகளையும், ஆக்ரமித்துள்ள கட்சிக்காரர்கள்.

சொன்னால் நம்பமாட்டீர்கள், கோயில் நிலங்களைக் குத்தகை எடுத்துள்ளவர்கள் கொடுக்க வேண்டிய பாக்கி 36 கோடி ரூபாய்! அதை வசூலிக்க இந்த அரசு என்ன நடவடிக்கை எடுத்தது? முறையாகப் பணம் கட்டாத குத்தகைக்காரர்களிடமிருந்து நிலங்களையாவது மீட்டிருக்கலாமே! அதையும் செய்யவில்லை.

ஒரு பக்தன் கும்பிடப் போனால் ஆயிரத்தெட்டு தடங்கல்கள். அவனுக்கு வெறுப்பு ஏற்படுத்தும் வகையில், வி.ஐ.பி. தரிசனம், சிறப்பு தரிசனம் என்று பணம் வசூலிக்கப் பலமுறைகளைக் கையாளும் போக்கு. செருப்புக்கு டோக்கன் தருவதிலிருந்து சூறைத் தேங்காயைப் பொறுக்குவது வரை ஏலம். எல்லாம் வியாபார நோக்கமாகிவிட்டது.

அந்தக் காலத்தில் கோயில்களுக்கு சொத்து எழுதி வைத்தவர்கள் ஆன்மீகம் தழைக்கவும், சமய நம்பிக்கை ஓங்கவும், அறநெறி மலரவும், இந்து மக்கள் ஒன்றுபடவும் அப்படிச் செய்தார்கள். இந்த நோக்கங்கள் பலம் பெறும் வகையில் காரியங்கள் நடப்பதில்லை. மாறாக நமது கோயில்கள் சிதைந்து, இடிந்து, வௌவால்களின் குடியிருப்பாகவும், சூதாடிகள் மடமாகவும் இருக்கின்றன. அங்கிருக்கின்ற அர்ச்சகர்களின் நிலை அதைவிட மோசம். ஓய்வு பெற்ற அர்ச்சகர் வாழ்வு அஸ்தமனம்தான். அரசியல்கட்சிக்காரர்கள் வயிறுவளர்க்க உதவும் சத்திரங்களாகிவிட்டன கோயில்கள்.

பலகோடி மதிப்புள்ள சொத்துக்கள் மலிவாக விற்பனை செய்யப்படுகின்றன. இதற்குச் சமீபத்திய உதாரணம்: வடபழநி கோயிலுக்குப் பின்புறம் உள்ள 236 கிரவுண்டு நிலத்தைகிரவுண்டு 20,000 ரூபாய்க்கு சைதாப்பேட்டை கூட்டுறவு சங்கம் என்ற அமைப்புக்கு விற்றுவிட முயற்சி செய்கிறார்கள். இந்த நிலத்தின் மதிப்பு கிரவுண்டு



**சட்டம் என்ன சொல்கிறது?**

**இந்து கோயில்கள்:**

"இந்து சமய அறநிலையச் சட்டம் 1959ல் அமுலுக்கு வந்தது. இந்தச் சட்டத்தின்படி, கோயில் நிர்வாக அதிகாரிகளை நியமிக்கும் அதிகாரம், சொத்துக்களைப் பராமரிக்கும் பொறுப்பு, தணிக்கை செய்ய அதிகாரம் எல்லாம் அரசுக்கு உண்டு. அறநிலையக் கமிஷ்னர் தலைமையில் இந்தத் துறை செயல்படுகிறது. பெரிய கோயில்களில் உதவி கமிஷ்னர்களும், சாதாரண கோயில்களில் நிர்வாக அதிகாரிகளும் கமிஷ்னரால் நியமிக்கப்படுகின்றனர். இது முழுக்க முழுக்க அரசுத் துறையாக இருப்பதால் அரசியல்வாதிகளின் தலையீடு மிகவும் அதிகம்.

**முஸ்லீம் மசூதிகள், தர்காக்கள்**

'வக்ப்' சட்டம் 1954ல் அமுலுக்கு வந்தது. இந்த சட்டத்தின்படி ஒரு வாரியத்தின் **(Board)** பொறுப்பில், மசூதிகளையும் தர்காக்களையும் நிர்வகிக்கும் பொறுப்பு விடப்பட்டிருக்கிறது. இந்த வாரியம் 'வக்ப் வாரியம்' என்று அழைக்கப்படுகிறது. பதினொரு உறுப்பினர்கள் இருக்கிறார்கள். ஆளும் கட்சியின் பிரமுகர்கள் இதில் உறுப்பினர்களாக இருந்தாலும் அரசியல் தலையீடு என்பது மிகவும் சொற்பம். மசூதிகளை நிர்வகிக்கும் 'முத்தவல்லி' என்பவரை நியமிக்கும் பொறுப்பு இந்த வாரியத்துடையது. மசூதிகள், தர்காக்கள் போன்றவற்றில் வரவு செலவுகளை பரிசீலிக்கும் அதிகாரம் இந்த வாரியத்துக்கு உண்டு. இந்த சட்டத்தின் 65வது பிரிவு குறிப்பிடத்தக்கது. அதன்படி "நல்ல காரியம் செய்கிறோம்" என்று (அது பாதகமாக இருந்தாலும்) வாரியம் சொல்லிக் கொண்டு ஒரு பணியைச் செய்தால், அதை எதிர்த்து யாரும் வழக்குப் போட முடியாது! இதன் அன்றாட அலுவல்களில் அரசின் தலையீடு என்பது அறவே கிடையாது. இந்த வாரியத்தின் உறுப்பினர்கள் முஸ்லீம்களாகத்தான் இருக்க வேண்டும்.



இரண்டரை லட்சம் இருக்கும். இந்தக் கூட்டுறவு சங்கத்துக்குப் பக்கபலமாக இருப்பவர்கள், இந்த முறைதான் ஆளும் கட்சியின் சார்பில் சட்ட மன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு 'சாமி'யும், அவருடைய குருவான அமைச்சரும். நல்லவேளையாக நாங்கள் தலையிட்டதால் இந்த பேரம் அரைகுறையாகவே நிற்கிறது.

ஆலயப் பணியாளர்களின் நிலை மிகவும் மோசம். தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஒரு கோயிலில் 12 ஆண்டுகளாகச் சம்பளமே வழங்கப்படவில்லை. இம்மாவட்ட கோயில் அர்ச்சகர்களுக்குப் பல விதங்களில் சுமார் நாலரை லட்ச ரூபாய் பாக்கி சேர வேண்டியிருக்கிறது! திருவரங்கம் கோயிலில் ஏ.ஸி. கார் வாங்கியிருக்கிறார்கள். சாமி ஏ.ஸி. கார் கேட்டாரா என்ன? எல்லாம் நமது அரசியல் ஆசாமிகள் அனுபவிக்கத்தான்! கும்பகோணத்தில் உள்ள கும்பேச்வரர் கோயிலில் டெலிபோன் பில் பல்லாயிரக் கணக்கில் வந்து இருக்கிறது. சாமி யாரிடம் தொலைபேசியில் பேசிக் கொண்டிருந்தார்? இதுவும் நமது அரசியல் ஆசாமிகளின் வேலை தான். சொன்னால் நம்பமாட்டீர்கள். ஒரு



**கிறிஸ்துவ சர்ச்சுகள் :**

'கொடுத்து வைத்தவர்கள்' என்று பிற மதத்தினரால் பாராட்டப்படுபவர்கள் சர்ச்சுகளை நடத்தும் திருச்சபையினர். சர்ச்சுகளின் விவகாரத்தில் யாரும் தலையிட முடியாது. அரசியல் சட்டம் 26 — 27 பிரிவின் கீழ் இவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது. சர்ச்சுகளின் வருமானம், செலவு, நிர்வாகம், எதைப்பற்றியும் ஒன்றும் கேட்டுக் கொள்ள முடியாது. அங்கு வேலை செய்யும் பணியாளர்கள் வீட்டுக்கு அனுப்பப்பட்டால் கோர்ட்டுக்குக் கூடப் போக முடியாது. பாதிரியார்கள் வைத்ததுதான் சட்டம்!

கோயில் மடப்பள்ளியில், நிர்வாக அதிகாரியின் வற்புறுத்தலின் பேரில் மாமிச உணவு சமைத்திருக்கிறார்கள்! ஆலயப் பணியாளர்கள் சம்பளம் குறைவாக இருப்பதால், அகப்பட்டதைச் சுருட்டுகிறார்கள். வடபழநி கோயிலில் கவுண்டரில் விற்கப்படும் அர்ச்சனைச் சீட்டுக்கள், அர்ச்சனைக்குப் பிறகு மீண்டும் கவுண்டருக்கே வருவதாகப் பரவலாகப் பேசப்படுகிறது. கோயில்களின் உபரி நிதி ஒட்டுக்கள் பெற அரசு திட்டும் திட்டத்துக்குத் திருப்பிவிடப்படுகிறது. அர்ச்சகர் நியமனத்துக்கு ஆயிரம், இரண்டாயிரம் என்று நிர்வாக அதிகாரிகள் வாங்கிக் கொள்கிறார்கள். காணிக்கையாக வரும் பொருட்கள் காணாமல் போய்விடுகின்றன. இன்னும் சில கோயில்களில் சித்த மருத்துவமனைகள் நடத்துவதாகக் கூறிக் கொண்டு நிர்வாக அதிகாரிகள் தங்க பஸ்பத்தைக் கோயில் செலவில் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள்! முன்பு கோயில்களில் 'ட்ரஸ்ட்' என்ற அமைப்பு இருந்தது. ஆனால் இன்று ட்ரஸ்ட் இல்லாத கோயில்கள்தாம் அதிகம். அங்கெல்லாம் 'தக்கார்' (fit person) என்பவரை அரசு நியமிக்கிறது. இந்தத் தக்காரும் நிர்வாக அதிகாரியும் வைத்ததுதான் சட்டம்.

மேற் சொன்னவைகளைத் தவிர இன்னும் ஏராளமான விஷயங்கள் உள்ளன. இந்து மக்களின் உணர்வுகள் புண்படுத்தப்பட்டு வருவதையும், முன்னோர்கள் உயர்ந்த நோக்கத்துடன் வழங்கிய ஆலயச் சொத்துக்கள் சின்னா பின்னமாகிக் கொண்டு வருவதையும் மக்களுக்கு உணர்த்தவே எங்கள் இயக்கம் இந்தப் போராட்டத்தில் இறங்கி இருக்கிறது. இதனால் பல சுயநல ஆசாமிகள், அரசியல்வாதிகள், இடைத்தரகர்கள் முதலியோருக்கு எங்கள் மேல் கோபம் வரும். ஆனால் இந்துக்களுக்குக் கோயில்கள் முக்கியம். நமது சந்ததிகளின் எதிர்காலம் வளமாக இருக்க வேண்டுமானால் நமது கோயில்களின் நிலை நன்றாக இருக்க வேண்டும். அரசின் கட்டுப்பாட்டில் இருக்கும்வரை அவல நிலைதான் தொடரும். அதனால்தான் சொல்கிறோம், "அரசே ஆலயத்தை விட்டு வெளியேறு!" என்று.

பேட்டி : **ப்ரியன்.**

---

**தலைவர்:** மரியாதைக்குரிய தாய்க்குலமேன்னு பேச்சை ஆரம்பிக்கிறாரே, என்ன விஷயம்?

"கூட்டத்திற்கு அவர் மனைவி வந்திருக்காங்களே."

**— சீழை அ. கதிர்வேல்.**




37 தொழிற்சாலைகளால் ரூ 100 கோடி நஷ்டம் ஏற்பட்டால் ரூ1000 கோடி நஷ்டம் உண்டாக எத்தனை தொழிற்சாலை நடத்த வேண்டும்?
ஏன், முப்பத்தேழே போதுமே!


தெலுங்கு கங்கை திட்டம்
புஸ்
ஆந்திரா-கர்நாடகா தகராறு



கல்கி

1985 ஜூலை 28
மலர் 43 இதழ் 52
குரோதன ஆடி 13



# உரிமை பேசும் எம். எல். ஏக்கள் உணரவேண்டிய கடமைகள்

எம். எல். ஏ.க்களின் உரிமையை நிலைநாட்டிய அதே நேரத்தில் கடமையையும் உணர்த்தியிருக்கிறார் ஜஸ்டிஸ் திரு எஸ். மோகன், தமது சமீபத்திய தீர்ப்பு ஒன்றில்.

வணிக ஒற்றுமை ஆசிரியர் திரு பால்ராஜ், சட்டசபை அங்கத்தினர்களைப் பற்றி எழுதியிருந்தது அவர்களை இழிவு படுத்துவது போலிருக்கவே உரிமைகள் கமிட்டிக்குப் பிரச்னை எடுத்துச் செல்லப்பட்டது. கமிட்டி தண்டனை வழங்க சிபாரிசு செய்தது. அந்தச் சிபாரிசை இன்றைய புதிய சட்டசபை நிறைவேற்றி இரு வார சிறைத் தண்டனை அளித்தது. இதை எதிர்த்து பால்ராஜ் சென்னை உயர்நீதி மன்றத்துக்குப் போனார். நீதிபதி திரு எஸ். மோகன், சட்டசபையின் உரிமைகளில் தாம் தலையிடுவதற்கில்லை என்றும், தேர்தல் நடந்து புதிய சட்டசபை உருவாகியிருந்தபோதிலும் பழைய சட்டசபையின் உரிமைகள் கமிட்டி செய்த சிபாரிசை இன்றைய சட்டசபை ஏற்று நடவடிக்கை எடுக்கலாம் என்றும் தீர்ப்பு வழங்கிவிட்டார்.

இதிலிருந்து பத்திரிகைகள் சட்டசபை நடவடிக்கைகளை விமர்சிக்கவே கூடாது என்றோ, மக்கள் பிரதிநிதிகளின் போக்கைக் குறை கூறவே கூடாது என்றோ ஆகிவிடாது. 'நமக்கேன் வம்பு' என ஒரேயடியாக ஒதுங்கிவிட்டால் பத்திரிகைகள் மக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமையிலிருந்து தவறியதாகும். தங்கள் பிரதிநிதிகள் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்பதை அறியும் உரிமை மக்களுக்கு உண்டு. அதை உணர்த்த வேண்டிய கடமை பத்திரிகைகளுக்கும் உண்டு. அந்தக் கடமையைக் கண்ணியமான முறையில் நிறைவேற்ற வேண்டும்; பத்திரிகைத் தர்மத்தைக் கடைப்பிடித்து நடந்து கொள்ள வேண்டும் என்பதே முக்கியம்.

சில பத்திரிகைகள் மனம்போனபோக்கில் மக்கள் பிரதிநிதிகளை ஒட்டு மொத்தமாக ஏசியும் பரிகசித்தும் எழுதும் போதும், கேலிச் சித்திரங்கள் போடும் போதும் அது உரிமைப் பிரச்னையாகி கமிட்டியின் பரிசீலனைக்கு அனுப்பப்படுவதில் வியப்பில்லை. 'மக்கள் பிரதிநிதிகள் கேவலமாகத்தானே நடந்து கொள்கிறார்கள்? அதனால்தான் நாங்களும் இப்படி எழுத, படம் போட நேர்கிறது!' என்று கூறுவதில் பொருள் இல்லை. பத்திரிகைகள் கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டுக்கு முன் உதாரணமாகத் திகழ வேண்டுமே தவிர, மோசமாக நடந்து கொள்ளும் சில எம். எல். ஏ.க்களைப் பின்பற்றி இவையும் படுமோசமாகிவிடக் கூடாது.

'பால்ராஜுக்கு சட்டசபை அளித்த தண்டனையில் தாம் தலையிடுவதற்கில்லை' என்று தீர்ப்பளித்த நீதிபதி, இதே தீர்ப்பில், டாக்டர் ராதாகிருஷ்ணனை மேற்கோள் காட்டி கூறியிருப்பது மிக முக்கியமான பகுதியாகும்: ''நமது நாட்டின் சார்பில் பேசுகிற மக்கள் பிரதிநிதிகள், பண்புள்ளவர்களாக, சுயநல மற்றவர்களாக, பொது நலனை மட்டுமே கவனிப்பவர்களாக, நமது தொன்மையான பண்பாட்டினைப் பிரதிபலிப்பவர்களாக இருக்க வேண்டும். தனிப்பட்ட குறுகிய, ஜாதி, மத சில்லறைச் சண்டை சச்சரவுகளில் ஈடுபடக்கூடாது. அதிகார மோகத்துக்கு ஆட்படக்கூடாது. நமது தேசத்தின் எதிர்காலம் நமது எஜமானர்களின் புத்திசாலித்தனத்தையே சார்ந்திருக்கிறது.''

இதைச் சொல்லிவிட்டு, ''இதனைக் கோருவதும், எதிர்பார்ப்பதும் தவறா? அதிகமா?'' என்றும் கேட்டிருக்கிறார் ஜஸ்டிஸ் மோகன். ராதாகிருஷ்ணனின் மேற்படி கருத்து ஒவ்வொரு எம். எல். ஏ.; எம். பி. யின் இதயத்திலும் எழுதப்பட வேண்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.


பக்கத்துக்குப்
பக்கம்
பரபரப்பான நாவல்
உணர்வுகள்
உறங்குவதில்லை
ர.சு.நல்லபெருமாள்
கல்கி
ஆகஸ்டு 4உ
ஆண்டு மலரில்
ஆரம்பம்

**நீங்கள் கேட்டவை - தராசு**



* போஸ் கொடுத்தார்

# வைஜயந்திமாலா பற்றி ஒரு தகவலும் இல்லையே?

* ஆர். வேங்கடேசன், பெரியார்நகர்.

? செய்யும் தொழிலே தெய்வம் என்று லஞ்சம் வாங்கும் ஒவ்வொரு அரசியல்வாதியும் நினைத்தால்....?

! லஞ்சம் வாங்குவதையே ஒரு தொழில் என்று கருதும் அளவுக்கு அவர்கள் முன்னேறி விட்டார்கள் என்று அர்த்தம்.

* எஸ். சம்பத்குமார், சென்னை

? திரைப்படங்களில் பிராமண சமுதாயம் மட்டும் சித்தீரிக்கப்படுவது பற்றி....?

! சித்திரிப்பதில் தடையில்லை. சித்திரவதை செய்யப்படும் போதுதான் ஆட்சேபனை கிளம்பும்; மனங்கள் புண்படும்.

* மு. ஜானகிராமன், தேரழுந்தூர்.

? குடும்பக்கட்டுப்பாட்டை அனைத்து மதத்தினருக்கும் கட்டாயமாக்க வேண்டும் எனும் இந்து முன்னணியின் கோரிக்கை குறித்து ...?

! குடும்பக் கட்டுப்பாட்டை அனைத்து மதத்தினருமே கடைப்பிடிப்பது நாட்டுக்கும் வீட்டுக்கும்நல்லது.கட்டாயப்படுத்துவது ஆபத்து—எந்த மதமானாலும் சரி. குடும்பக்கட்டுப்பாட்டின் வளர்ச்சி, பிரசாரம், கல்வி அறிவு, அந்தந்த மதங்களைச் சேர்ந்த பெரியோர்களின் அறிவுரை ஆகியவற்றின் அடிப்படையில் அமைய வேண்டும்.

* ஆர். எஸ். ராஜ். காரைக்கால்.

? வைஜயந்திமாலான்னு ஒரு நட்சத்திர எம்.பி. இருந்தாரே. எங்கே அவரைப் பற்றி ஒரு தகவலும் இல்லை?

! நீங்க இப்படிக் கேப்பீங்கன்னு தெரிஞ்சு தானே அவங்களும் இப்ப ராஜீவ் சென்னை வந்தப்ப அவரோடும் ஸோனியாவோடும் சேர்ந்து மேடையிலே நின்னு போட்டோக்குப் போஸ் தந்திருக்காங்க, பிறகென்ன?

* டாக்டர் பி. சீனிவாசன், சேலம்.

? தமிழக அரசு ஏற்படுத்தியுள்ள வாரியங்கள் எத்தனை? அதற்கு ஆகும் நிர்வாகச் செலவு எவ்வளவு?

! தேர்தலில் தோற்றுப் போன கட்சிக்காரர்கள், சமாதானப்படுத்த வேண்டியிருக்கிற கட்சி எம். எல். ஏக்கள் எத்தனை பேரோ அத்தனை வாரியங்களை உருவாக்கிவிட வேண்டியதுதானே! அவற்றின் நிர்வாகச் செலவு பற்றி தி. மு. க. எம். எல். ஏ. யாராவது சட்டமன்றத்தில் கேள்வி எழுப்பினால்தான் உண்டு. அதிகாரபூர்வமான பதில் கிடைக்கும். நாம் சொல்வதென்றால் பூந்து விளையாடற அளவு வரிப் பணத்தை விரயமாக்குகிறார்கள் என்று கூறுவதோடு சரி!



* எதிரி அல்ல * தவர்ந்தவர்

* எச். கே. நாசர், தோப்புத்துறை

? ஒரு குற்றத்தை இரண்டாவது முறை செய்பவரை சென்னை நகரை விட்டுக் கடத்தும் புதிய சட்டம் சட்ட சபையில் தாக்கலாகியிருப்பது பற்றி....?

! எல்லா அரசியல்வாதிகளையும் பின்

தொடர்ந்து சென்னை நகரமே காலியாக வேண்டும். அது அவ்வளவு சுலபமல்ல! எத்தனையோ அர்த்தமற்ற அபத்தச் சட்டங்களுள் ஒன்று.

* சி. சுப்பு, தேரழுந்தூர்.

? First Blood படம் பார்த்துவிட்டீர்களா?

! அடுத்த வாரம் விமர்சனம் எழுதுவதாயிருக்கிறேன். நீ ராங்ல வராதே என்று ஜெயமன்மதன் கூறுவதால் அவர் பொறுப்பிலேயே விட்டு விடுகிறேன்.

* பா சு மணிவண்ணன், திருப்பூர்.

? இரு மனம் கலந்துதானே திருமணம்? பின் ஏன் இத்தனை பிரச்னைகள்?

! இடையில் பணமும் கலந்து உறவாடுவதால்தான்.

* வித்யா, தருமபுரி.

? அசெம்பிளியில் இம்பு, ஒரு பர்மிய நகர் ஆனது குறித்து?

! இதென்ன பிரமாதம்? சென்ற வாரம் சென்னையில் நடந்த காங்கிரஸ் நூற்றாண்டு விழாக் கூட்டத்தில் பெரியவர் பக்தவத்சலம் அவர்களை, பழனியாண்டி 'முன்னாள் பிரதமர் பக்தவத்சலம்' என்று குறிப்பிட்டாரே, அதை விடவா!

* எஸ். ஆரோன்பிரபு, திருச்சி.

? அந்தரங்கம் புனிதமானது. அதை எப்படி மற்றவர்களிடம் பகிர்ந்து கொள்வது?

! எது புனிதமானதோ அதை மற்றவரிடமிருந்து மறைக்க அவசியமில்லை. எதை மற்றவரிடமிருந்து மறைக்கிறோமோ அது புனிதமானது இல்லை.

* கி. ராகவன், கதிராமங்கலம்.

? 'கல்கியார் காதில் விழாதா' என்று தாய் பத்திரிகை கூச்சலிடுகிறதே?

! அசலை விட்டுவிட்டு நிழலைத் தொடர்ந்து தவித்திருக்கிறார் அக்கட்டுரையை எழுதியவர். அமரர் கல்கியோ, ரசிகமணி டி. கே. சி.யோ சங்கீத மும்மூர்த்திகளின் எதிரிகள் அல்ல. மாறாக அவர்களின் இசை மேன்மையை, பக்தி உணர்வை, மேதைத் தன்மையை நன்கறிந்தவர்கள். இன்றைய கல்கி பத்திரிகையும் தமிழிசையின் விரோதி அல்லவே அல்ல. சங்கீத மும்மூர்த்திகளின் முக்கியத்துவத்தைக் குறைத்து கர்நாடக இசை போதிப்பது முறையல்ல என்கிறோம். பருப்பில்லாமல் கல்யாணமா என்று கேட்டால் பாயஸத்தை வேண்டாம் என்று கூறியதாகி விடுமா? மற்றபடி சூழ்ச்சி, வீழ்ச்சி எல்லாம் அரசியலில் ஈடுபட்டுள்ள பத்திரிகையாசிரியர்கள் அறிந்திருக்கலாம்; நமக்குத் தெரியாது.

* கொடுமுடி கணேசன், சேலம்.

? உலக அறிஞர்களில் தங்களை கவர்ந்தவர் யார்?

! பலர் உண்டு என்றாலும் சமீபத்தில் தமது ஒரு செயலால் என்னைக் கவர்ந்திருப்பவர் ருஷ்ய அதிபர் கோர்பசேவ். அண்மையில் மேற்கு ஜெர்மானிய அதிபர் மாஸ்கோவுக்கு விஜயம்செய்தபோது அவருக்கு அளிக்கப்பட்ட விருந்தில் மது பானம் பரிமாறக் கூடாது என்று உத்தரவிட்டிருக்கிறார் ருஷ்ய அதிபர்! அங்கேயெல்லாம் மதுவினால் ஏற்படும் தீமைகள் அதிகமாக உணரப்பட்டு வரும் போது நாமோ...? குறைந்தபட்சம் அதிகாரபூர்வமான விருந்துகளின் பொருட்டு மக்களின் வரிப் பணத்தை மது வாங்கப் பயன்படுத்துவதில்லை என்ற அளவுக்காவது மத்திய மாநில அரசுகள் ஒரு கட்டுப்பாட்டை சட்டதிட்டத்தை ஏற்படுத்திக் கொண்டால் தேவலாம்.



* பிரதமர்?! * அதைவிடவா!

* கல்யாணி முரளிதரன், சென்னை.

? உங்கள் பதிலை நான் ஆட்சேபிக்கிறேன். சென்னை ரோஸ்மேரி மெட்ரிகுலேஷன் ஸ்கூலிலும் D.A.V. ஸ்கூலிலும் நன்கொடை இன்றி என் குழந்தைகளைச் சேர்த்திருக்கிறேனே?

! இப்படி இன்னொருவர் அன்னை வேளாங்கண்ணி பள்ளி பற்றியும் எழுதியிருக்கிறார். விதி விலக்குகளாக உள்ள சிறந்த பள்ளிகள் பொதுவான நிலையை உறுதிப்படுத்துகின்றன.

* அ. சிவாராவணன், விருத்தாசலம்—1.

? சமையல் செய்பவர், எழுத்தாளர், கோலம் போடுபவர்—இவர்களில் யாருக்கு அதிகம் பொறுமை தேவை?

! தான் போடப்போகும் கோலத்தின் ஆயுள் ஒரு சில நிமிடங்களுக்குக்கூட நீடிக்காது என்று தெரிந்திருந்தும்—அந்தக் கோலத்தை இரண்டொருவர்கூட ரசித்துப் பாராட்டமாட்டார்கள் என்று தெரிந்திருந்தும் சிரத்தையாகக் கோலம் போடுகிறார்களே, அவர்களுக்குத்தான் பொறுமை தேவை!

---

★ ரூ 10 பரிசு பெறுபவர்:

டாக்டர் பி. சீனிவாசன்,
16, கொமாரசாமி செட்டி தெரு,
செவ்வாய்ப்பேட்டை,
சேலம்—636 002.

காலையில் உங்களுக்கு புத்துணர்ச்சி கொடுக்க ஒரு புது முறையின் அறிமுகம்...



# ட்ரஸ்ட்

ஒரு புதிய பற்பசை
உங்களுக்கு புத்துணர்ச்சியும்; உறுதி கொண்ட புன்சிரிப்பும் கொடுக்க.

காலை கதிரவனின் புத்துணர்ச்சியைப் போன்ற புன்சிரிப்புடன் உங்கள் நன்னாட்களை ஆரம்பியுங்கள். உங்கள் பற்களை ட்ரஸ்ட் (மார்னிங்) பற்பசையினால் துலக்குங்கள். ட்ரஸ்ட் பற்பசையில் அடங்கியுள்ள வீரியமான கலவைப் பொருட்கள் உங்கள்




பற்களை முற்றிலும் சுத்தப்படுத்தி, பளிச்சிட்டுப் பிரகாசிக்க செய்கின்றன ட்ரஸ்ட் பற்பசையில் அடங்கியுள்ள அபூர்வமான இனிய வாசம் வாயில் துர்நாற்றத்தைப் போக்கி, உங்கள் சுவாசத்தை குளிர்ச்சியுடனும், புத்துணர்ச்சியுடனும் மிளிரச் செய்கின்றது. ட்ரஸ்ட்டுடன் பல் துலக்கும் நற்பழக்கத்தை உடன் கொள்ளுங்கள்.



ட்ரஸ்ட்... ஒரு விசேஷமான பற்பசை.

பற்களை பாதுகாக்க ஒரு நற்பழக்கத்தின் அறிமுகம்...



# ட்ரஸ்ட்

**பற்சிதைவு உண்டாக்கும் கிருமிகளிடமிருந்து இரவு முழுவதும் உங்கள் பற்களை பாதுகாக்க ஒரு விசேஷமான பற்பசை.**

நீங்கள் உறங்கும்பொழுது உங்கள் பற்களினிடையே சிக்கி இருக்கும் உணவுப் பண்டங்களின் மீதங்கள் வாய் கிருமிகளை பெருகச் செய்து 'ப்ளாக்' என்ற மெல்லிய மேற்பூச்சை படரச் செய்கின்றன. அதிலிருந்து சில அமிலங்கள் உண்டாகி பற்சிதைவு, பற்குழிகள் ஏற்படுத்துகின்றன.

உங்கள் பற்களைப் பாதுகாக்க இரவில் உறங்கு முன் ட்ரஸ்ட் (நைட்) பற்பசையினால் பல் துலக்குங்கள்




அதில் இருக்கும் ஒரு பிரத்தியேக கலவைப் பொருள் பல மணி நேரம் வாயில் தங்கி பற்களைக் கெடுக்கும் கிருமிகளை கொல்லுகின்றது. ட்ரஸ்ட் (நைட்) மூலம் இரவில் பல் துலக்கும் பழக்கத்தை உடன் மேற்கொள்ளுங்கள் – உங்கள் பற்களின் ஆரோக்கியத்திற்காக




**ட்ரஸ்ட்... ஒரு விசேஷமான பற்பசை.**

## வட்டமேஜை



# அமெரிக்க அன்னைக்குத் தெரியுமா, வீரமணியின் அநாகரிகப் பேச்சு?

* 'கல்லுக்குள் ஈரம்' படைத்த ர. சு. நல்ல பெருமாளின் தொடர் கல்கியில் வெளியாகப் போகிறது என்று பார்த்துக் குதூகலம் அடைந்தேன். இவ்வாண்டின் இணையற்ற போனஸ் இதுதான்.

விழுப்புரம். ஆர். ரவி வரதன்.

* வாசகர் பட்ட துன்பத்தைப் படித்து மனம் நெகிழ்ந்தேன். மிக நெருக்கமானவர்கள் மரணமடைந்த தறுவாயில் சடலத்தை அப்புறப்படுத்த முடியாத நிலையால் ஏற்படும் வேதனை சொல்லொணாதது. இதைத் தவிர்க்க அரசாங்கம் ஒவ்வொரு சிறிய ஊரிலும் உள்ள ஆஸ்பத்திரிகளில் இதற்கென ஓர் ஊர்தி ஏற்பாடு செய்யலாம்.

விழுப்புரம். கே. எஸ். குமார்.

* ஒவ்வொரு வாரமும் இது போன்ற அழகான அட்டைப் படங்களை வெளியிட்டால் நாங்கள் தொடர் கதைகளைச் சேர்த்து பைண்டு செய்வதுமல்லாமல் அட்டைப்படங்களையும் அல்லவா இனி பைண்ட் செய்ய வேண்டியிருக்கும்!

தருமபுரி. வித்யா.

* வீரமணியின் அமெரிக்க அம்மா கட்டுரை படிக்க ரசமாயிருந்தது. ஆனால் வீரமணியின் அநாகரிகப் பேச்சுக்களைப் பற்றி அந்த அமெரிக்க அம்மா அறிந்திருக்க நியாயமில்லை!

சென்னை—31. ஸ்ரீ கிருஷ்ணு.

* தமது சொல்லாலும் செயலாலும் ஓர் அமெரிக்கப் பிரஜையை ஆகர்ஷித்தது மட்டுமின்றி அவரை அன்னையாகவே எண்ணுமளவு பாசம் வளர்த்த வீரமணியை மெச்சுகிறேன்.

நெல்லிக்குப்பம். ரா. ஜோதிராமன்.

* நினைவில் ஒரு திரைப்பாடல் தொகுப்பு ரம்மியமாக இருந்தது. கூடவே சில சம்பவங்கள் கற்பனையோ என்று எண்ணத் தோன்றியது.

கோவை—16. ரம்யா..

* நீங்கள் பழைய பாடல் ரசிகராயிருக்கலாம். அதற்காக 'நினைவில் ஒரு திரைப்பாடல்' பகுதியில் எல்லாவற்றையுமே பழைய பாடல்களாய்த் தேர்ந்தெடுத்து வழங்கியது நியாயமில்லை!

நீடாமங்கலம். ஏ. கோவிந்தகுமார்.

* பாவம் கி. ரா. ஸார்! பேசும் கார்ட்டூன் சித்திரமே வெளியானதிலிருந்து உம்ம வீட்டுக் குடிநீர் குழாய் என்ன பாடுபடுகிறதோ!

அரகண்டநல்லூர். கே. பிரதாப் சிங்.

* மயிரிழையில் தப்பிய மனோகரின் வார்த்தைகள் மனத்தை நெகிழ வைத்தன. அவர் நடிப்புலகின் ஒரு நன்முத்து என்பதை நிரூபித்துவிட்டார்.

இளங்கார்குடி. கோ. பாஸ்கர்.

* ஜெயந்தனின் கதாநாயகி மொட்டை ஓர் அபூர்வப் பிறவி. ஆமாம், அவள் கிராமம் எங்கே இருக்கிறது? அவளைப் போய்ப் பார்க்க வேண்டும்!

தஞ்சாவூர். பொ. நடனசிகாமணி.

* "ஹலோ! ஜெயமன்மதனா?
வாராவாரம் டெலிபோன் பாணியிலேயே விமர்சித்தால் எப்படி சார்? போர் அடிக்குதே! வேற பாணியில் முயன்று பாருங்களேன், வைச்சிடட்டுமா?
டொடக்.

பழநி. சிவ. குமார்.

* பாலாஜியின் தவறுகளை நாசூக்காகச் சுட்டிக் காட்டிய ஜெயமன்மதனுக்கு (அண்ணி திரைப்படம்) பாராட்டுக்கள்.

துடுப்பதி. எம். பி. ரங்கநாதன்.

* மனோராவின் தோற்றம், வளர்ச்சி, இன்றைய நிலை போன்றவற்றைத் தெள்ளத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டிய கட்டுரை. முடிவில் அரசுக்கு முக்கியமான விஷயத்தை வலியுறுத்தியது கனகச்சிதம்.

கும்பகோணம். கே. பட்டு

* ஆளுங்கட்சியின் தொழிற்சங்கத்தைச் சாடிய இவ்வார கல்கியின் தலையங்கம் உங்கள் பாரம்பரியமிக்க தைரியத்திற்கு ஒரு சான்று. தலையங்கத்திற்கு அளிக்கப்பட்ட தலைப்பு மிகப் பொருத்தம்.

தோட்டக்குறிச்சி. இரா. வளையாபதி.

* ஒரு வாசகர் 'சமரசம் உலாவும் இடமே' என்ற பாடலைக் கண்ணதாசன் பாடல் என்று குறிப்பிட்டு இருக்கிறார். 'ரம்பையின் காதல்' படத்தில் இடம் பெற்ற அந்தப் பாடலை இயற்றியவர் அ. மருதகாசி.

சென்னை—28. எம். தியாகராஜன்.

* சமீபத்தில் திருப்பூர் பனியன் தொழிலாளர் வேலை நிறுத்தம் தொழிற்சங்கங்களின் செயல்பாடுகளை வெளிச்சம் போட்டுக் காட்டியது. பல மாதங்களாக நீடித்த வேலை நிறுத்தத்தின் காரணமாகப் பல தொழிலாளர்களின் குடும்பங்கள் பட்டினி கிடந்ததுதான் மிச்சம். ஒரு பயனும் ஏற்படவில்லை. ஆளுங் கட்சி சங்கம், எதிர்க் கட்சி சங்கம் என்று இரு பிரிவுகளும் கட்சி நோக்கத்திலேதான் செயல்படுகின்றன. தொழிலாளர்களின் நலன் இரண்டாம் பட்சமாகிவிடுகிறது.

ஈரோடு—11. வலம்புரி நாகராஜன்.

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது, காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




23

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

| | |
|---|---|
| புரதம் | [illegible] |
| கொழுப்பு | [illegible] |
| கார்போ | [illegible] |
| ஹைட்ரேட் | [illegible] |
| கால்ஷியம் | [illegible] |
| பாஸ்பரஸ் | [illegible] |
| சோடியம் | கோலின் |
| குளோரைடு | வைட்டமின் (பி6) |
| ([illegible] வடிவில்) | வைட்டமின் (பி12) |
| பொட்டாஷியம் | பாலிக் அமிலம் |
| இரும்புச்சத்து | வைட்டமின் சி |
| அயோடின் | வைட்டமின் டி |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் ஈ |
| வைட்டமின் 'பி' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



## காம்ப்ளான் — திட்டமிட்ட பரிபூர்ண உணவு

884. GLC. 120 Tm

16

# மௌனப் பயம்

வகுப்பு முடிந்து ப்ரொஃபஸர் அகன்றதும் தன் ஸ்லிங் பேகைத் தோளில் மாட்டிக் கொண்டு ரஞ்சனி ருமாவின் தோளை அணைத்தபடி மாணவக் கும்பலுடன் வெளியில் வந்தாள். வெளித் தாழ்வாரத்தில் கால் வைத்த உடனேயே ஏதோ ஒரு குழப்பம் சூழலில் தெரிந்தது. திட்டுத் திட்டாக நின்றிருந்த மாணவர்களின் முகங்களில் திகைப்புத் தெரிந்தது. அவர்களுடன் நின்றிருந்த ராக்கேஷ் முன்னால் நகர்ந்து வந்தான்.

''ரஞ்சனி, நியூஸ் தெரியுமா?'' என்றான் மெள்ள.

''என்ன நியூஸ்?''

''தி பி.எம். ஹாஸ் பீன் ஷாட்!''

ரஞ்சனியின் விழிகள் பிதுங்கின. ''வாட்? எப்பொழுது? எப்படி? இஸ் ஷி டெட்?''

''தெரியாது. ரொம்ப ஸீரியஸ் என்கிறார்கள். ஆல் இந்தியா இன்ஸ்டிட்யூட்டுக்கு எடுத்துக் கொண்டு போயிருக்கிறார்களாம்.''

''எப்பொழுது நடந்தது இது? யார் சுட்டார்களாம்?'' கேள்வி நாவில் பிறக்கும் போதே இரண்டாவது கேள்விக்கு விடை அடி வயிற்றில் ஜனித்து ஜில்லிட்டது.

''இன்று காலை ஒன்பதரை மணிக்கு என்கிறார்கள். வீட்டை விட்டுக் கிளம்பித் தோட்டத்தைத் தாண்டும்போது, ஹர் ஓன் ஸெக்யூரிட்டி கார்ட்ஸ் ஷாட் அட் ஹர்! ஜஸ்ட் இமாஜின்!''

''சீக்கியர்களா?'' என்றாள் ரஞ்சனி தன்னை அறியாமல்.

''பின் வேறு யார் இப்படிப்பட்ட வேலையைச் செய்வார்கள்?''

ருமாவின் தோள்கள் விறைத்துக் கொள்வதை ரஞ்சனி உணர்ந்து கொண்டாள்.

''டூ பேட் யார்!'' என்று வாய் முணுமுணுக்க நாபியிலிருந்து ஒரு துயரம் கிளம்பிற்று. அமிருத்ஸரில் நான்கு மாதங்களுக்கு முன் சுவாசித்த காற்றின் விரோதமும், கோபமும் இப்பொழுது இந்த க்ஷணம் மூச்சை முட்டிற்று. திடீரென்று ஷௌக்கீன் சொன்ன வார்த்தைகள் நினைவுக்கு வந்தன.

''நான் மட்டும் தில்லியில் இருந்தால் பிரதமருக்கு வெகு அருகில் வேலை பார்க்கும் சீக்கியர்களை விலக்கிவிடுவேன். சீக்கியனின் கோபம் எப்படிப் போகும் என்று சொல்வதற்கில்லை!''

சீக்கியரின் கோபம். அதன் ஒட்டுமொத்தத்தின் பிரதிபலிப்பா இது?

அவள் திடுக்கிட்டாள். எல்லாருக்கும் நிச்சயம் கொலை வெறி இல்லை. இப்படி ஒரு விளைவு ஏற்படக்கூடும் என்கிற பயம் மட்டும் நிச்சயமாக எல்லாரிடமும் இருந்தது.

''மிக மோசமான விளைவு இருக்கப் போகிறது'' என்ற கர்தார் ஸிங்கின் வார்த்தைகளில் இந்தப் பயம்தான் இருந்தது.

''ஹர் ஓன் ஸெக்யூரிட்டி கார்ட்ஸ் யார்!'' இதே திகைப்பு எங்கு திரும்பினாலும்.

''எந்த சீக்கியனையும் நம்பக்கூடாது யார்!''

ரஞ்சனி கலவரத்துடன் காரசாரமாக விவாதிக்கும் அந்த மாணவக் கும்பலைப் பார்த்தாள். இவர்களிடையே ஒரு வகுப்புக் கலவரமே ஆரம்பிக்கப் போகிறதா? நாலைந்து



சீக்கியப் பையன்கள் வெகு வேகமாக வெளியேற ஆரம்பித்தார்கள்.

''பிடியுங்கடா, அவங்களை!'' என்று ராக்கேஷ் ஒரு சப்தம் போட்டதும் அந்தப் பையன்கள் தலைதெறிக்க ஓட ஆரம்பித்தார்கள்: மாணவக் கும்பல் 'ஓ' வென்று பரிகசித்தது.

ரஞ்சனி சரேலென்றுபாய்ந்துராக்கேஷின் தோளை ஆத்திரத்துடன் பற்றினாள்.

''ராக்கேஷ், உனக்கென்ன பைத்தியமா? எவனோ ஒருத்தன் பண்ணின தப்புக்கு இவர்களை ஏன் சீண்டுகிறாய்?''

''இவன்கள் யாரையும் நம்ப முடியாது. அவன்கள் தோலைச் சுரண்டிப் பாரு, காலிஸ்தான் இருக்கும்!''

''இதப் பார், நீ பேசறபேச்சு கொஞ்சங் கூட விவஸ்தையில்லாதது.''

''எத்தனையோ வருஷம் கூடவே ஸெக்யூரிட்டி காரடா இருந்தவன் நிராதரவா நடந்து போன ஒரு பொம்பளையைச் சுட்டுத் தள்ளினான்னா பின்னே வேற யாரைத்தான் நீ நம்ப முடியும்?

''அதற்காக நீ எல்லாச் சீக்கியர்களையும் கண்டனம் பண்றது தப்பு!''

''உனக்கேன் இப்படி ரோசம் பொத்துக் கொண்டு வருகிறது?''

''ராக்கேஷ்! உனக்கு விஷயம்தெரியாது? ரஞ்சனியோட பாய் ஃப்ரண்டு மன்மோஹன் ஸிங் ஒரு சீக்!''

''ஆ! அப்படிச் சொல்லு! ஆனால் ரஞ்சனி ஜாக்கிரதையா இரு! அவனையும் நம்பக் கூடாது!''




வாஸந்தி

''ஷட் அப்! வில் யூ?'' என்றாள் ரஞ்சனி வெகு ஆத்திரத்துடன்.

ருமா வெடுக்கென்று அவளது அணைப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு மாணவர் கும்பலுக்கு முன் மையமாக நின்றாள். திடீரென்று உயர்ந்த குரலில் சொன்னாள்.

''நான் ஒரு சீக்! என்னை நம்புவீர்களா மாட்டீர்களா? நம்பிக்கை இல்லாவிட்டால் என்ன செய்வீர்கள்? அடிப்பீர்களா? கொல்வீர்களா? கமான்!''

இவள் என்ன திடீரென்று உணர்ச்சி வசப்பட்டுப் போகிறாள் என்கிற கவலையுடன் ரஞ்சனி ''ருமா, வா போகலாம்!'' என்றாள்.

மாணவர் கும்பல் சில விநாடிகள் பேசாமல் இருந்தது. பதில் சொல்ல வேண்டியது தன்னுடைய கடமை என்று நினைத்தவன் போல் ராக்கேஷ் ஒரு தீவிரப் பார்வையுடன் சொன்னான்.

''உன் இடத்தில் நான் இருந்திருந்தால் செய்தியைக் கேட்டவுடன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு ஓடிப் போயிருப்பேன் அவமானத்தில்.''

ருமாவின் முகம் சிவந்து போயிற்று.

''மஹாத்மா காந்தியைச் சுட்டவன் ஒரு ஹிந்து! அப்பொழுது நீ தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டாயா?''

''இல்லை! ஏனென்றால் நான் அப்பொழுது பிறக்கவில்லை!''

''வில் யூ ஸ்டாப் திஸ் நான்ஸென்ஸ்?'' என்று ரஞ்சனி கத்தினாள்.

''ருமா! நீ பேசாமல் வரப்போறியா, இல்லையா? இதென்ன விதண்டாவாதம் பண்ணக் கூடிய சமயமா? உங்களுக்கெல்லாம் வெட்கமில்லை? ஹாவ் ஸம் டீஸென்ஸி யார்!''

அவள் விருவிருவென்று முன்னால் நடந்தாள். தலைக்குத் தலை அம்பலமாக மாணவர்கள் தங்கள் கருத்துக்களைச் சொல்லிக் கொண்டு திட்டுத்திட்டாக நின்றிருந்தார்கள். அவள் எதையும் கவனித்தும் கவனிக்காத பாவனையுடன் அடிமனத்துப் பதைப்புடன் விரைந்தாள்.

''இறந்து போயிருப்பார், யார்!''

''பின்னே? அத்தனை குண்டுகளை ஒரு அறுபத்தி ஆறு வயசு உடம்பு தாங்கமுடியும்னு நினைக்கிறியா?''



''சண்டை, நான் வாங்கிக்கிட்டு வரப்போற சம்பளப்பணத்தை அவங்க ரெண்டு பேரிலே யார் வாங்கிக்கறதுங்கறதைப் பத்தித்தான். நடுவில் கடன்காரன் வந்து வாங்கிக்கிட்டுப் போகப் போறாங்கற உண்மை அவங்களுக்குத் தெரியாது. பாவம்!''

பதைப்பு அதிகரிக்க ரஞ்சனி விரைந்தாள்.

கடவுளே, இப்படியும் இருக்குமா? எப்படிப்பட்ட கிராதகச் செயல் இது!

''ஹார் ஒன் ஸெக்யூரிட்டி கார்ட்ஸ் யார், ஜஸ்ட் இமாஜின்!''

அவளாலும் தாங்கத்தான் முடியவில்லை. இந்த அளவுக்கு வெறி கண்ணை மறைக்குமா? தொழிலுக்குத் துரோகம் செய்யக் கொல்லை யில் கோடாலியுடன் நிற்குமா? இந்தக் கோபத்தைக் காட்டியதால் இவர்களுக்கு என்ன லாபம்? தங்கள் இனத்தையே அல்லவா பலவீனப்படுத்திவிட்டார்கள்! இப்பொழுது குற்றமற்ற சீக்கியனின் மேலெல்லாம் ஜனங்களின் கோபம் பாயப் போகிறது. கும்பலின் வெறியை எப்படி அடக்க முடியும்? நாலைந்து சகாக்கள் கூட இருக்கும் தென்பில் பொறுப்பில்லாமல் பேசும் ராக்கேஷ் ஒரு கும்பலில் என்னதான் செய்ய மாட்டான்?

ஏகப்பட்ட யோசனைகள் மண்டையைக் குடைந்தன. புரியாத காரணங்களுக்காக மனசு பரிதவித்தது. பலவிதக் குரல்கள் மூளையைத் தாக்கின. கலங்கடித்தன.

''எங்களுக்கு மிகப் பெரிய அவமானம் ஏற்பட்டுவிட்டது பேட்டி! நாங்கள் சும்மா இருக்கமாட்டோம்!''

இப்பொழுது அந்தக் கிழவன் சமாதானமாகியிருப்பானா எது மானம்? எது அவமானம்? அதன் எல்லைகளை யார் வகுப்பார்கள்?

''நானாயிருந்தால் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு ஓடியிருப்பேன்!''

'முட்டாள்தனமான பிரச்னைகளுக்கு முட்டாள்தனமான அணுகுமுறைகள்தான் இருக்கும்....'

யார் சொன்னது? நினைவில்லை. முட்டாள்தனமான அணுகுமுறைகளின் விளைவுகள் எத்தனை பயங்கரம்! ''ஸூயிஸைடல்'' — அப்படித்தான் சொன்னான் மன்மோஹன் ஸிங் ப்ளூஸ்டார் ஆபரேஷனைப் பற்றிக் கேள்விப்பட்டவுடன், கிரேக்க நாடகத்தின் சோகம் போல.

மன்மோஹன் ஸிங் இன்றைய செய்தியைக் கேட்டதும் பதறிப் போயிருப்பான், நிச்சயம்.

''அவனையும் நம்பக்கூடாது, ஜாக்கிரதையாய் இரு!''

அவளுக்கு சுர்ரென்று ஆத்திரம் கருண்டு எழுந்தது. எத்தனை திமிர் அந்த ராக்கேஷுக்கு!

திடீரென்று ருமாவின் நினைவு வந்து அவள் திரும்பிப் பார்த்தாள். ருமா சற்றுத் தொலைவில் தலையைக் குனிந்தபடி வந்து கொண்டிருந்தாள். இவளும் வரவர எத்தனை உணர்ச்சி வசப்பட்டுப் போகிறாள் என்று அவளுக்கு வியப்பேற்பட்டது.

''ஏன், இப்படித் தனியா பிரிஞ்சு ஓடறே?'' என்றாள் ருமா.

''உங்க சண்டைகளையெல்லாம் கேட்க எனக்குப் பொறுமையில்லே! நாம முதல் காரியமா பஸ்ஸைப் பிடிச்சு வீட்டுக்குப் போகணும். செய்தி நிஜம்மாவே ஸீரியஸ்ஸானதாக இருந்தால் அப்புறம் என்ன நடக்

கும்னு சொல்ல முடியாது. கலாட்டா நடக்கலாம்!''

''டு யூ திங்க் ஸோ?''

''நிச்சயமா! இங்கேயே பாரு. இத்தனைக்கும் மாணவக் கும்பல் அதிகம் இருக்கல்லே. அப்படியும் கலாட்டா ஆரம்பிக்கல்லியா?''

ருமாவின் முகத்தில் யோசனைக் கோடுகள் தெரிந்தன.

''பாட் யார்!'' என்று முணுமுணுத்தாள். ''சேதியைக் கேட்டு எனக்கு எத்தனை கஷ்டமா இருக்குன்னு யாருக்கும் புரியாது!''

''சுமான் யார்! ராக்கேஷ் ஏதோ உளறினா அதை ஸீரியஸ்ஸா எடுத்துக்காதே! என் மனநிலைக்கும் உன் மனநிலைக்கும் வித்தியாசம் இருக்கணுங்கற அவசியமில்லே. எனக்கேற்பட்ட அதிர்ச்சிதான் உனக்கும் இருக்கும். மன்மோஹனுக்கும் இருக்கும்.''

''மற்றவர்கள் நம்பமாட்டார்கள், எங்களை!''

''ஃபர்பெக்ட் தெம் யார்!''

பஸ்ஸைப் பிடித்து யூனிவர்ஸிடியிலிருந்து பயணிக்கும்போது பஸ்ஸிலும் ஓர் இறுக்கமான சூழல் கும்மென்று எல்லார் நாவையும் கட்டிப்போட்டது. பயணிகளின் பார்வையில் ஒரு பீதியும் திகைப்பும் தெரிந்தன.

எதிர்த்த ஸீட்டில் இருந்த ஒருத்தன் தன் சிநேகிதனிடம் மெல்லிய குரலில் கேட்டான்:

''அப் க்யா ஹோகா?'' (இப்பொழுது என்ன ஆகும்?)

சிநேகிதன் உதட்டைப் பிதுக்கினான்.

''அடுத்த பிரதமர் யாராயிருக்கும் என்று நீ நினைக்கிறாய்?''

''அரே, சுப் ரஹோ யார்!'' (பேசாமலிரு) என்று மற்றவன் அதட்டினான்.

ரஞ்சனிக்குக் கலக்கமாக இருந்தது. விஷயம் முடிந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் இவர்களாகச் சமாதி கட்ட மாட்டார்கள்.

திடீரென்று ஒரு விஷயம் தாக்கிற்று. செய்தி துக்கத்தை அளித்ததே தவிர வியப்பை ஏற்படுத்தவில்லை. அமிருத்ஸர் போய்விட்டு வந்ததிலிருந்து கிட்டத்தட்ட இப்படிப்பட்ட ஒரு முடிவை மனசு பீதியுடன் எதிர்பார்த்திருந்தது. ஆனால் இத்தனை குரூரமாக அல்ல.... ஹர் ஓன் ஸெக்யூரிட்டி கார்ட்ஸ்.... ஜஸ்ட் இமாஜின்.....!

வழி நெடுக ருமாவும் அவளும் பேசிக் கொள்ளவேயில்லை, வார்த்தைகளே கிடைக்காதது போல.

''அப்புறம் போன் பண்ணு ரஞ்சனி'' என்று ருமா தன் வீட்டுக்குள் நுழைந்தாள். ஒரு கணம் ருமாவின் தாத்தா கண்ணில் பட்டார். அவரிடம் இன்று ஏதோ வித்தியாசம் தெரிந்தாற் போல் ரஞ்சனிக்குப் பட்டது. மேற்கொண்டு அதைப்பற்றி யோசிக்காமல் அவள் வீட்டிற்கு விரைந்தாள்.

கதவைத் திறந்ததுமே அம்மா பிரலாபித்தாள்.

''என்ன அக்கிரமம் பார்த்தியாடி ரஞ்சனி! செய்தி தெரியுமா?''

''தெரியும். ஆனா விவரமாத் தெரியாது. ரேடியோ கேட்டியா?''

''ரேடியோவிலே ஒண்ணும் சொல்லக் காணோம்.''

ரஞ்சனி செருப்பைக்கூடக் கழற்றாமல் டிரான்ஸிஸ்டரில் பி. பி. ஸி. செய்தி அறிவிப்பை முடுக்கினாள். உன்னிப்பாகக் கேட்டுவிட்டுப், 'போயாச்சும்மா!' என்று கையை விரித்தாள்.

''நம்ம ரேடியோவிலே சொல்லலியே. என்ன அக்கிரமம்! ஸர்தார்ஜிகளை நம்பக் கூடாதுன்னு அதான் அப்பா சொல்றார்....!''

''அம்மா, ப்ளீஸ்! சும்மா இரேன்.''

''உனக்கேன் இப்படிப் பொத்துண்டு வரது?''

''எதுவும் பொத்துண்டு வரல்லே! எனக்குப் பசிக்கிறது. சாதம் போடு. சாப்பிட்டுட்டு வெளியிலே போறேன். ஆல் இந்தியா இன்ஸ்டிட்யூட்லே என்ன நடக்கறதுன்னு பார்க்கறேன்!''

''உனக்கென்ன பைத்தியம் பிடிச்சிருக்கா? ஏகக் கலாட்டா நடக்கலாம்னு எல்லாரும் பேசிக்கறா! நீ அதிலே போய் மாட்டிக்கப் போறியா? இங்கே சரோஜினி மார்க்கெட்லே நாலஞ்சு சர்தார்ஜிகள் ஸ்வீட் கொடுக்க ஆரம்பிச்சாளாம். செமை உதை வாங்கினாளாம். அடிதடியிலே நீ மாட்டிக்கணுமா?''

''ஸ்வீட் கொடுத்ததை யார் பார்த்தாளாம்?''

''அடுத்த வீட்டு வேலைக்காரன் சொல்றான்.''

''வதந்தியெல்லாம் நம்பாதே.''

''வதந்தியோ இல்லையோ, நிறைய சர்தார்ஜிகளுக்குப் பழி வாங்கிட்ட மாதிரிதான் தோணும்னு மிஸஸ் ஜெயின் சொல்றா. தங்களுடைய மானம் காப்பாத்தப்பட்ட மாதிரி!''

அம்மாவின் பேச்சை எப்படித் தடுக்க முடியும் என்கிற கவலையுடன் அவள் யோசனையில் ஆழ்ந்தாள். பளிச்சென்று ஒரு விஷயம் விளங்கிற்று. ருமாவின் தாத்தாவிடம் தெரிந்த மாற்றம்.

சமீப காலமாக அவர் கட்டியிருந்த கறுப்புத் தலைப்பாகை இன்று இருக்கவில்லை. அதற்குப் பதிலாக ஒரு நீலத் தலைப்பாகை உட்கார்ந்திருந்தது.

அதன் தாத்பர்யத்தை நினைத்துப் பார்க்கக் கூச்சம் ஏற்பட்டது.

(தொடரும்)

மனைவி: ''என்னங்க அநியாயமா இருக்கு. ஏழு மாலைக்கு காசு கொடுத்திருந்தீங்க. இப்ப கூட்டத்திலிருந்து நாலு மாலையோடு வீட்டுக்குத் திரும்ப வர்றீங்க.''

— கீழை அ. கதிர்வேல்.






# விற்க முடியாத கனவுகள்

பணம் பிரதானமாகப்பட பத்தாயிரம் தந்த நபருக்கு சீட்டு வழங்கப்பட்டுப் பிரச்னைக்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது.

''சார் சார் இது அநியாயம்.....

''என் மவன் நிறைய மார்க்கு வாங்குனவன்!

''எனக்கு ஒரே மவன். அவனை நம்பித்தான் என் குடும்பமிருக்கு. காசைப் பாத்து ஆளை விட்டுடாதீங்க. இந்தப் பணத்துக்கே நான் செய்யக் கூடாத தப்ப செஞ்சேன்....''

எந்திரம் இயங்கிக் கொண்டிருந்தது. கடூரமான சப்தம் போட்டுக் கொண்டும், தனது இராட்சஸச் சக்கரங்களைச் சுழற்றிக் கொண்டும் வெகுவேகமாக மின்சாரத்தை உறிஞ்சிக் குடித்தபடி சுழலும் அதன் பற் சக்கரங்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான் ராமசாமி.

சில மாதங்களுக்கு முன்னால் எதிர்பாராத விபத்து என்று பிறர் நம்பும்படியான ஒரு சூழ்நிலையில் அதற்குள் அவன் தனது இடது கையை விட்டுச் சுண்டு விரலையும், மோதிர விரலையும் பலி கொடுத்த அந்தச் சம்பவம் அடிக்கடி அவனைக் கீறிக் கிளறிக் கொண்டிருந்தது.

கருத்தமையும்,கிரீசுமாகக்கட்டிப்புரண்டு உருண்ட அந்தச் சக்கரம் சிவந்து உருள, ராமசாமி போட்ட சப்தத்தால் தொழிற் சாலையே கதிகலங்க...

''ராமசாமி உன்னே அக்கவுண்டண்ட் கூப்பிடுறாரு...'' — ஆபீஸ் அட்டெண்டர் வந்து அழைக்கவும் பிரக்ஞை திரும்பியது ராமசாமிக்கு.

''போ,வரேன் ...'' — என்று சொல்லிவிட்டு எந்திரத்தின் சிவந்த பட்டனை அமுக்கி அதன் ஓட்டத்தை நிறுத்தினன். பக்கத்து எந்திரத்தைத் தொடர்ந்து ஓட்டிக்கொண்டிருக்கும் பரமசிவம் ராமசாமியைக் கொஞ்சம் அனுதாபத்தோடு பார்த்துச் சிரித்தான்.

டூல் ரூமைத் தாண்டும் போது அசிஸ்டன்ட் மானேஜர் எதிர்ப்பட்டார்.

''எப்படி இருக்கு ராமசாமி, காயமெல்லாம் ஆறிடுச்சா?'' — கனிவோடு அவனை எதிர் கொண்டார்.

''ஆறிடுச்சு சார், ஆனு ரெண்டு விரல் இல்லாம மொட்டமா வேலே பார்க்கிறதுதான் சிரமமா இருக்கு...''—வருத்தப்பட்டுக்கொண்டான் ராமசாமி.

''என்ன பண்றது விதி'' — இது அசிஸ்டென்ட் மானேஜர். அவரே தொடர்ந்தார்:

''நீயும் இந்தத் தொழிற்சாலேல வேலேக்குச் சேர்ந்து வருஷம் இருபது ஆச்சு. உன்னைப் பத்தி ஒரு ரிமார்க் கிடையாது! லீவ், லாஸ் ஆஃப் பே, நைட் ஷிப்டுல தூங்கறது, கேர்லெஸ்ஸா ஒர்க் பண்றது கிடையாது. இருந்தும் நீ இப்படி ஒரு இழப்புக்கு உள்ளாயிட்டேன்னு அதை நெனேச்சுப் பார்க்கவே சங்கடமா இருக்கு. கவலேப்படாதே. எம்.டி. கிட்டச் சொல்லியிருக்கேன். உனக்கு ஆறுதலா ஏதாவது கட்டாயம்செய்வார்.இன்ஷ்யூரன்ஸ் பணமும் கிடைக்கும்.''

—பேசிய அசிஸ்டென்ட் மானேஜர், 'வரட்டுமா?' — என்பது போல் இமை சிலிர்க்கக் கனியப் பார்த்து அகன்றார். ராமசாமி தொடர்ந்து நடந்து ஆபிசை எட்டினன்.

அக்கவுண்டன்ட் அருணசலம் ராமசாமிக்காகக் காத்துக்கொண்டிருந்தார். ''வா ராமசாமி. உன் இன்ஷ்யூரன்ஸ் பணம் செட்டிலாயிருக்கு. கொடுக்கத்தான் கூப்பிட்டேன்.''

''எம். டி. கம்பெனி சார்பில இரண்டாயிரம் தரச் சொல்லியிருக்காரு. மொத்தம் ஏழாயிரத்துச் சில்லறை...'' — என்றபடி ஷராத்துக்களே எடுத்துக் காட்டி நிறைய கையெழுத்துக்களே வாங்கத் தொடங்கினர் அருணசலம்.

ராமசாமி இந்த உலகிலேயே இல்லே. அவன் துணிந்தும், வேண்டுமென்றும், எலும்பையும், சதையையும் கொஞ்சம் தவரேடு விற்றுப் பெற்ற அந்தத் தொகை சலவைத் தாளாய் அவனேப் பார்த்துப் பல்லேக் காட்டியது.

அதில் ஆறுமுகத்தின் முகம் பளீரென்று தெரிந்தது!

*****




''20 இட்லி, பத்து வடை!''

''பார்சல் சர்வீஸ் தனியா இருக்கு! அங்கே போய் வாங்கிக்குங்க!''

''பார்சல் யார் கேட்டா? இங்கே சாப்பிடத்தான்!''

சலவை செய்த சாயம் போன பேண்ட்டு சட்டைக்குள் படுகம்பீரமாக நிமிர்ந்தான் ஆறுமுகம். தோளில் ஒரு ஜோல்னுப்பை. அதில் பள்ளிக்கூட சர்டிபிகேட்டுகள், சான்றிதழ்கள்!

''எல்லாத்தையும் கவனமா எடுத்துக்கிட்டியா லே...?'' — ராமசாமி கேட்க வேகமாகத் தலேயை ஆட்டினன் ஆறுமுகம்.

''அங்கப் போய் அத்த மறந்துபிட்டேன், இத்த மறந்துபிட்டேன்னியோ கொடலே உருவிப்புடுவேன் ...'' — கொஞ்சம் கடுரமாகவே கோபித்துக் கொண்டான் ராமசாமி.

அங்கம்மாளுக்கு அதைக் கேட்கச் சிலிர்த்துக் கொண்டு வந்தது.

''நல்லா படி, உன் அப்பன் உடம்புல இன்னும் நிறைய சதையும் ரத்தமும் இருக்கு. எம்புட்டு செலவானுலும் சரி. கவலேப்படாதே. என் கஷ்டம் மட்டும் நீ படாதே..''

—அவன் மனம் குமுறிக் கொட்டியது. ஆறுமுகம் பய்த்துடன் அவனே நெருங்கி வர இருவருமாகச் சேர்ந்து நடக்க ஆரம்பித்தார்கள்.

*****

போகன் வில்லா செழித்த காம்பவுண்டுக்கு அப்பால் வண்ண வண்ண கட்டிடங்களோடு கம்பீரமாகக் காட்சி தந்து கொண்டிருந்தது அந்தப் பாலிடெக்னிக்.

''பி. ஏ. வும், எம். ஏ. வும் படிக்கறதுல ஒரு பலனுமில்ல சார். பூஜ்யம்தான். ஏதோ தொழில் கல்விதான் இந்தக் காலத்துல கொஞ்சம் மதிப்பா இருக்கு.'' —ஒருவர் சலித்துக் கொண்டார்.

''சரியாச் சொன்னீங்க... அதான் ஆர்ட்ஸ் காலேஜுக்கு போறேன்னு நின்னவனேப் பிடிச்சு இங்க இழுத்துக்கிட்டு வந்தேன். ஆர்ட்ஸ் காலேஜ் அட்மிஷனுக்கே ரெண்டு கேட்டாங்க. இங்கே எவ்ளோ ரேட்டு?''

"அஞ்சய்யா...! டொனேஷனு வாங்க றாக."

—பல தரப்பட்ட பேச்சுக்களும் அலைபுர ளும் அந்த பிராந்தியத்தில் தானும் தன் மக னுடன் சேர்ந்து கொண்டு தடுமாற ஆரம் பித்தான் ராமசாமி.

அடிக்கடி தன் மடியைத் தொட்டுப் பார்த் துக் கொண்டான். ஏழாயிரம் கனத்தது.

பத்தாயிரம் தந்து அட்மிஷனுக்காகக் காத்திருந்தார் ஒருவர். ஆனால் ஆறுமுகத்தை விட அந்த நபரின் பிள்ளை குறைவான மார்க்கு களே வாங்கியிருந்தான். இருப்பதோ ஒரே ஒரு சீட்! எப்படிச் சமாளிப்பது? பிரின்சி பால், செகரட்டரி, கணக்காளர் மூளையைக் கசக்கிக் கொண்டனர்.

இறுதியில் பணம் பிரதானமாக்கப்பட பத்தாயிரம் தந்த நபருக்கு சீட்டு வழங்கப் பட்டுப் பிரச்னைக்கு முற்றுப் புள்ளி வைக்கப் பட்டது.

"சார் சார், இது அநியாயம்...

"என் மவன் நிறைய மார்க்கு வாங்குனவன்!

"எனக்கு ஒரே மவன். அவனை நம்பித்தான் என் குடும்பமிருக்கு. காசைப் பாத்து ஆளை விட்டுடாதீங்க... இந்தப் பணத்துக்கே நான் செய்யக் கூடாத தப்ப செஞ்சேன்... என் விரலை இழந்து வாங்குன பணமய்யா... தயவு பண்ணுங்க...."

—ராமசாமி அடித் தொண்டை வரளக் கத்தியும் பலனில்லை. ஆனால் ஆறுமுகம் என்ன நினைத்தானோ தெரியாது. ராமசாமி யைப் பிடித்து இழுத்துக் கொண்டு வெளியே வந்தான். அந்த இளம்பிஞ்சு முகத்தின் விழி கள் கூடக் கலங்கியிருந்தன.

"அப்பா..." — நுங்கை ஒத்த இதழ்களைப் பிரித்து அழைத்தான்.

"எனக்காண்டிதான் கைய்ய வெட்டிக் கினியா?" — அவன் கேட்டபோது கண்களில் நீர்க் கூடு!

"சும்மா ஒளறுனேன், அதெல்லாம் ஒண்ணுமில்ல. நீ வெளியே இனயப் பேசிப் பிடாதே. அப்பால விவகாரமாயிடும். இன்னா?" — சோகத்தோடு அவனைத் தேற்றி விட்டு நடக்க முடியாமல் நடந்தான் ராம சாமி.

"எங்கப் பார் காசு, எதுலப் பார் காசு. நம்மளை மாதிரி ஆளுக இந்த சூழ்நிலையில எதிர் நீச்சல் போட்றதுங்கறது பெரும் பாடுப்பா... என் கஷ்டம் நீ படக்கூடாதுன்னு நெனைச்சேன். மூவாயிரத்துல உனக்கு சீட்டு போயிடுச்சு. கவலைப்படாதே... மூவாயிரம் தானே திருடியாச்சும் ஒன்னிய சேத்துப்பிட றேன்... என் கம்பெனியில வேலை பார்க்கும் போது செத்தா ஐ யாயிரம் தருவாங்க. அப் படி செத்தாச்சும் தந்துட்றேன்..."

—புலம்பிக் கொண்டே வீடு வந்து சேர்ந் தான் ராமசாமி.

"இப்ப அப்படி என்ன அந்த பாலிடெக் னிக் படிப்பு பெரிய தேவலோகப் படிப்பு? கிடைக்காட்டி போனாப் போச்சுன்னு விடாம உசுரை உட்டாச்சும் சீட்டு வாங்கித்தாரேன்னு சொன்னீங்களாமே..."

—அங்கம்மாள் சினக் குழைவோடு அவனை எதிர்கொண்டாள்.

"ஏ போ புள்ள அப்பாலே. உனக்கு நாட்டு நடப்பு தெரியுமா?"

"காசு பணத்திலே இல்லிய்யா எதிர்காலம் அது மனசப் பொருத்த விஷயம். ஆமா, இதுக்காகவே திட்டம் போட்டுச் சிலமாசம் முந்தியே கையை வெட்டிக்கிட்டீங்களா? எல் லாம் என் தலை எழுத்து."

—அங்கம்மாள் கண்ணீர் பொல பொலக்க அவன் எதிரே சிடுசிடுத்தாள்.

—ஊடே அழைத்தது ஆறுமுகத்தின் குரல். திரும்பிப் பார்த்தான் ராமசாமி. ராமசாமி யின் காக்கி உடுப்பை எடுத்து மாட்டிக் கொண்டு கையில் ஏழாயிரம் சில்லறையுடன் நின்றான் ஆறுமுகம்.

தூக்கி வாரிப் போட்டது ராமசாமிக்கு.

"அப்பா... நீ. சரின்னா இந்த ரூவாய்க்கு ஒரு சைக்கிள் கடை வெச்சுக்குவேன். எனக்கு என்னவோ இதான் சரின்னு படுது. காசோட கூட எதிர்காலத்தை விக்கறதைக் காட்டிலும் அதையே முதலாப் போட்டு உழைக்கிறது தானே புத்திசாலித்தனம்?"

—மிகச் சின்ன வயது ஆறுமுகம், ராம சாமி முன்னே பிரும்மாண்டமானான். ராம சாமியோ துயர சமுத்திரமாகி அலை பாய ஆரம்பித்திருந்தான்.



ஓர் அன்பரின் வீட்டில் கி. வா. ஜ. சாப்பிட்டார். சாப்பிட்ட பிறகு இலையை எடுப்பவர்களுக்கு எளிதாக இருக்கட்டும் என்று, கீழே சிந்தியிருந்தவற்றை எடுத்து இலையில் போட்டார். வீட்டுக்காரர் இலையை அவர் எடுக்கப் போகிறாரோ என்று அஞ்சி, 'இலையை வைத்து விடுங் கள்' என்றார்.

"நான் அதைச் சாப்பிடுவது இல்லை!" என்று சிரித்துக் கொண்டே சொன்னார் கி. வா. ஜ.

— கி.வா.ஜ.வின் சிலேடைகள் என்ற நூலிலிருந்து.
ஏ. கே. நாசர்.

''தாத்தாவிடம் நான் அப்படி நடந்து கொண்டதால் என் மீது கோபமாக இருக்கிறீர்கள்...''

''நோ... நோ... அதெல்லாம் ஒன்றுமில்லை'' அவன் குரல் தாழ்ந்திருந்தது.

படிய ஆரம்பித்து விட்டாள். இனி வெற்றிதான்... புரவீட்... மனத்துக்குள் ஒரு குரல் கூவியது...



அவசரம் அவசரமாக ஆட்டோ பிடித்து, எழும்பூரில் இறங்கி, 'டி' கோச்சைத் துழாவி, கம்பார்ட்மெண்ட்டைக் கண்டுபிடிப்பதற்குள் ரமேஷுக்குப் போதும் போதும் என்றாகி விட்டது.

நுழை வாயிலில் முண்டி அடித்துக் கொண்டு கூட்டம்...

ரமேஷ் சளைத்தவனா! ரிலீஸ் ஆகும் புதுப் படத்திற்கு, முதல் நாளே முதல் டிக்கெட் வாங்கி நண்பர்கள் மத்தியில் கொடி நாட்டிய

பெருமை அவனுக்கு உண்டு. பாய்ந்தான்.

''தம்பி ...வயசானவன் ... இப்படி இடிச்சுக் கிட்டு ஏறுறியே... கொஞ்சம் பார்த்துப்பா...''

ரமேஷ் கிழவரை கண்களால் எரித்தான். ''யோவ் கிழவரே ... நாங்கதான் இப்படி ஏறுகிறோம்... உனக்குப் புத்தி எங்கே போச்சு... பத்து நிமிஷம் கழிச்சு ஏறினு என்ன குடி முழுகிடும்?... பொண்ணு பார்க்கப் போறது நின்னுடுமா... இல்லே உன் கல்யாணம் நின்னுடுமா...''

''சரியாச் சொன்னீங்க பிரதர்'' — கூட்டத்தில் இன்னொரு இளவட்டம், ரமேஷின் பேச்சை ரசித்தது.

''மிஸ்டர்!'' கொஞ்சம் குரல் பக்கவாட்டிலிருந்து கேட்டது. ''இது ரிசர்வேஷன் கம்பார்ட்மெண்ட்தானே ...வயசானவரை இடித்துத் தள்ளிவிட்டு ஏறுகிறீர்கள்... போறதற்குக் கிண்டல் வேறு.... பெரியவருக்குக் கொஞ்சம் மரியாதை காண்பித்தால் குறைந்தா போய் விடுவீர்கள்...?''

''அனிதா இளம் மனைவி... அருமையான நாவல்... நானும் படித்திருக்கேன்...'' ரமேஷ் அசடு வழிந்தான். அவள் வெறுப்புடன் அவனைப் பார்த்தாள்.

'கோபத்தில் இருக்கிறளே... அவளை எப்படிச் சமாதானப்படுத்துவது... நட்பைப்பெறுவது...?'

''சார்... உங்களிடம் நான் அப்படி நடந்து கொண்டிருக்கக் கூடாது... மன்னித்துக் கொள்ளுங்கள்...'' — அவன் கிழவரிடம், அவள் காதுகளில் மட்டும் விழும்படி, மன்னிப்புக் கேட்டான்.

அவள் ஆச்சர்யத்துடன் நிமிர்ந்தாள். 'முதல் வெற்றி... ஏ கிழக் கோட்டானே... நானு மன்னிப்புக் கேட்பேன் .... எல்லாம் உன் பேத்திக்காக.''

''பரவாயில்லே தம்பி... அதெல்லாம் நான் மனசில் வைச்சிக்கிறது இல்லே...'' கிழவர் நெளிந்தார்.

''என்ன சார்... படுக்கணுமா?'' — ரமேஷ் கேட்டான்.

# அவனுடன் ஓர் இரவு...

அர. நாகராஜன்

ரமேஷ் அந்தக் குரலில் மயங்கினன்.

''நீங்க வாங்க தாத்தா...'' — அவன் கிழவருக்குக்கைகொடுத்து,மேலேஏற்றிவிட்டான்.

'ஓ! கிழத்தின் பேத்தியா இந்தக் கிளி! தெரியாமல் போய் விட்டதே...'

ரமேஷின் அதிர்ஷ்டம்... அவன் உட்கார்ந்த பகுதியில்தான் கிழவரும், அந்தப் பெண்ணும் அமர்ந்திருந்தார்கள்.

மனத்துக்குள் விசிலடித்தான்.

அந்த இரவை ரமேஷ் தூங்கி 'வேஸ்ட்' செய்யப் போவதில்லே. 'அந்தப் பெண்ணின் முக அழகை ரசித்தபடி... ஆகா எவ்வளவு சுகமாக இருக்கும்...

''புத்தகம் படிக்கிறீர்களா?'' — கையிலிருந்த 'அகதா கிறிஸ்டியை' அவன்முன் நீட்டினன்.

''நான் ஆங்கில நாவல்கள் படிப்பதில்லே'' — நறுக்கென்று சொல்லிவிட்டு, கையில் சுஜாதாவின் நாவலே எடுத்து வைத்துக் கொண்டாள்

''ஆமாம் தம்பி... உங்க காலேக் கொஞ்சம் நகர்த்திக்கிட்டா, நான் துண்டை விரிச்சுக் கட்டையைப் போட்டுடுவேன்.''

ரமேஷுக்கு அருமையான யோசனை பளிச்சிட்டது. கிழம் தூங்கி விட்டால், இடையூறு இன்றி அவளிடம் பேச்சுக் கொடுக்கலாம்...

''பெரியவரே... உங்களுக்கு எதுக்கு வீண் சிரமம்... நான் இப்படி ஓரமாக நகர்ந்து கொள்கிறேன்... நீங்கள் இப்படிக் காலே நீட்டிக் கொண்டு சௌகரியமா படுத்துக்குங்க...''

'தன்னை மோதித் தள்ளிவிட்டு, தகாத வார்த்தைகளால் 'அர்ச்சனை' செய்தவன், உபகாரம் செய்கிறன்...' கிழவரால் நம்ப முடியவில்லே.

'ஆமாம் தாத்தா... அவர் சொல்வது சரிதான் .... அப்படியே நன்றாகப் படுத்துக் கொள்ளுங்கள்'' — அவள் சொல்லிவிட்டு, எதிர் வரிசைக்குப் போனன். எதிர் வரிசையில் ஒருத்தர் ஏற்கெனவே, நடைபாதையில்

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி
# கன்காரு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள புதிய விஐபி கன்காரு! நாகரீக நரம்போடிய அலாதி ஸ்டைலிங். கண்டறியாத வர்ண வகைகள்: பீச க்ரீம் (செவ்விள மஞ்சள்), டெஸர்ட் பிரவுன் (மணற் கபில நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச் சாம்பல்), க்ரீம் சாக்கலேட், மேலும் பலப் பல. உட்புறமோ இடவசதி மிகுதி.

ஓட்டோடிப் பார்வையிடுவீர்: அருகிலுள்ள வியாபாரியிடம்... சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.

LINTAS VIP M 10 2013 TM

படுக்கப் போயிருந்தார்.

கிளி அவன் சொன்னதை அங்கீகரித்து விட்டது. 'இது இரண்டாவது வெற்றி.'

கிழவர் காலை நீட்டிப் படுத்துக் கொண்ட சிறிது நேரத்தில் குறட்டை விட ஆரம்பித்து விட்டார்.

''நீங்கள் எதுவரை போகிறீர்கள்?''

''எதற்கு கேட்கிறீர்கள்?'' — அவள் பதிலுக்குக் கேட்டாள்...

இடையில் டி. டி. ஆர். செக்கிங்... பத்து நிமிடம் வேஸ்ட்...

''தாத்தாவிடம் நான் அப்படி நடந்து கொண்டதால் என் மீது கோபமாக இருக்கிறீர்கள்...''

''நோ... நோ... அதெல்லாம் ஒன்றுமில்லை'' அவன் குரல் தாழ்ந்திருந்தது.

படிக்க ஆரம்பித்து விட்டாள். இனி வெற்றி தான்... புரஸீட்... மனத்துக்குள் ஒரு குரல் கூவியது.

''உங்கள் பெயரைத் தெரிந்து கொள்ளலாமா?''

''எதற்கு, என்னைப் பெண் கேட்டு வரப் போகிறீர்களாக்கும்...'' — அவள் துடுக்காகவே பதில் சொன்னாள்.

''ஏன் வரக் கூடாதா?''

''வரலாம்... ஆனால், எங்கள் வீட்டு அல்சேஷன் நாய்க்கு உங்கள் மாதிரி பரட்டைத் தலை ஆசாமிகள் வந்தால் கொள்ளை பிரியம்... கால் கிலோ சதையாவது எடுத்துவிடும்...''

'சரியான வாயாடியாக இருப்பாள் போலிருக்கிறதே.'

சிறிது நேரத்தில் புத்தகத்தை மூடி வைத்தாள். 'விளக்கை நிறுத்தி விடலாம்.. எனக்குத் தூக்கம் வருகிறது' — என்றவள், யாருடைய ஆட்சேபத்தையும் பொருட்படுத்தாமல், விளக்கை அணைத்து விட்டாள்.

'போச்சு... அவன் கற்பனையெல்லாம் பொடிப் பொடியாய்ச் சிதறி விட்டது... அவள் முக அழகைத் தரிசிக்கும் பாக்கியமும் போய் விட்டது.'

இருட்டுக்குள் விழித்துக் கொண்டு, கிழத்திடம் இடி வாங்கிக் கொண்டு இன்னும் எத்தனை மணி நேரம்...

முதுகுத் தண்டு வலித்தது. எங்கேயாவது காலை நீட்டலாம் என்றால் கூட முடியவில்லை.

'கிழத்திற்கு இடத்தை விட்டிருக்க வேண்டாம்...'

வினாடி ஒவ்வொன்றும் ஒவ்வொரு யுகமாய் நகர...

அவளோ அவன் உணர்வுகளைப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. ஆனந்தமாய் உறங்கிக் கொண்டிருந்தாள்.

வண்டி விழுப்புரம் வந்தது.

''விழுப்புரமா?'' — அவள் இருட்டில் பதற்றத்துடன் கேட்டாள்.

''ஆமாம்.''

அவள் 'விருட்'டென்று எழுந்து கொண்டாள்.

கிழவரும் விழித்து விட்டார்.



# வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

## ரேஷன் கியூவில் நின்ற போது...

போட்டி: 13.

ரேஷன் கியூவில் நிற்கும்போது உங்களுக்கு ஏற்பட்ட சுவையான அனுபவத்தைக் கீழே வெற்றிடத்தில் எழுதி அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்கு விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ். உறையின் மேல் ''ரேஷன் கியூவில் நின்றபோது'' என்று குறிப்பிடல் அவசியம். இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்பவும்.

இன்னும் 40 விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ்கள் கல்கி நேயர்களின் இல்லங்களுக்கு வரக் காத்திருக்கின்றன. ஒன்றை அவசியம் தட்டிக் கொண்டு போக வாராவாரம் போட்டியில் பங்கு பெறுங்கள்.

முடிவு தேதி: 12.8.85

என் பெயர்: ..................................................

விலாசம்: ..................................................

..................................................

## யூனிட்டுகளை ஜூலை 31க்குள் ஏன் விரைந்து வாங்க வேண்டும்....




ஏனெனில் இன்னும் பதினொரு மாதங்களுக்கு இந்த சந்தர்ப்பம் கிட்டாது.

# UNITS

ஜூலை முழுவதும் யூனிட்டுகளை மிகக் குறைந்த விலையில் வாங்கலாம். வருடத்திலேயே மிகக் குறைந்த விலை ரூ. 12.75 தான்!

யூனிட்டுகள் உங்களுக்கு ஏராளமான பலன்களை அளிக்கின்றன.

வருடா வருடம் யூனிட்டுகள் மேன் மேலும் அதிக டிவிடெண்டுகளை அளித்து வருகின்றன. இந்த வருடம் 14.25% டிவிடெண்ட் அளித்துள்ளன! யூனிட்டுகளை எளிதாகவும், விரைவாகவும் ரொக்கமாக மாற்றிக் கொள்ளலாம்.

மேலும் யூனிட்டுகள் உங்கள் முதலீட்டிற்கு பாதுகாப்பு அளிக்கின்றன. விசேஷ வரிச் சலுகைகளும் உண்டு!

யூனிட்டுகளை வாங்குவதோ மிகச் சுலபம்! அருகாமையில் உள்ள எங்கள் அலுவலகங்களிலோ அல்லது வங்கிகள் மற்றும் முக்கிய தபால் நிலையங்களிலோ நீங்கள் யூனிட்டுகளை வாங்கலாம். மேலும், எங்கள முக்கிய பிரதிநிதிகள் அல்லது ஏஜெண்டுகளிடம் இருந்து விவரம் அறியலாம்.

இன்றே யூனிட்டுகளில் முதலீடு செய்வீர். பதினைந்து லட்சத்திற்கும் மேலான மக்களின் நம்பிக்கையை யூனிட்டுகள் பெற்றுள்ளன!



## யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா

தலைமை அலுவலகம்: பம்பாய்-20
(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)

பிராந்திய செயலகம்: ரெஜினு மான்ஷன்
46, செகண்ட் லைன் பீச்,
சென்னை 600 001.
போன்: 27433/24146

கேரளா செயலகம்:
12/758, தெக்கே மடம் சாலை,
திருச்சூர் 680 001, போன்: 24690

ஆந்திர பிரதேஷ் செயலகம்:
27-11-6B மேரி சாலை, கவர்னர்பேட்,
விஜயவாடா 520 002. போன்: 63964

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.**

---

தமிழ்நாட்டிலுள்ள எங்கள் முக்கிய பிரதிநிதிகள்:- திரு. ஏ. தனபால், கோயம்புத்தூர், போன்: 34776 (O). திரு. எம். ராமமூர்த்தி, மதுரை, போன்: 30160 (O) 43179 (R). திரு. கே. முத்துசாமி, தஞ்சாவூர், போன்: 1224 (R). திரு. என். கே. இங்கர்சால், சேலம், போன்: 51520 (R). திரு. எம். ராமலிங்கம், திருச்சிராப்பள்ளி, போன்: 28280 (O). திரு. பி. நாராயணன், வேலூர், போன்: 21575 (O).

---

Sista's - UTI.329.85 TM A

''இங்கேயா இறங்கப் போகிறீர்கள்?'' — அவன் நெஞ்சில் ஏமாற்றம்.

அவள் அவனை லட்சியம் செய்யவில்லை. ''நான் வரட்டுமா தாத்தா... பார்த்துப் போங்க...'' — விடை பெற்றுக் கொண்டு, லக்கேஜை எடுத்துக் கொண்டு புறப்பட்டு விட்டாள்.

''ஏன் பெரியவரே... உங்க பேத்தி இறங்கி விட்டாள்... விழுப்புரத்தில யார் இருக்கிறீர்கள்?''

கிழம் பொக்கை வாயைக் காட்டியது. ''பேத்தியா? சரியாப் போச்சு... அவ யாரோ நான் யாரோ... ஏதோ வயசானவன்... உபகாரமா தாத்தான்னு கூப்பிட்டா அவள் என் பேத்தி ஆகிவிடுவாளா?''

கிழவர் மீண்டும் படுத்துக் கொண்டார்.

ரயில் ஓட ஆரம்பித்தது. மனத்துக்குள் ஒரு வெறி. கிழவர் மீது வெறுப்பு. 'சே! இவளை இந்தக் கிழத்தின் பேத்தி என்று எண்ணி, உபகாரம் பண்ணி ஏமாந்து விட்டோமே...'

ஏமாற்றம் எரிமலையாய் மாறியது.

கிழவரை உலுக்கி எழுப்பினான். ''ஏ கிழமே, என்ன தூக்கம்... மனுஷன் பக்கத்துல உட்கார இடமில்லாம தவிக்கறான்... எட்டியா உதைச்ச... எந்திரி.., இது உங்க தாத்தா வீட்டு ரயில் இல்லே.. நானும் படுக்கணும்...'' — அவன் போக்கு ஏன் மாறி விட்டது? இப்போது கிழவர் மலங்க மலங்க விழித்தார்.

# அருள் வாக்கு



பதினான்கு லோகங்களும் ஒரு ராஜ்யம். இந்த ராஜ்யத்திற்கு ஒரு சக்கரவர்த்தி. அந்த சக்கரவர்த்திக்கு எல்லா ஜீவராசிகளும் பிரஜைகள். ராஜ்யமும் அநாதி. சக்கரவர்த்தியும் அநாதி. ராஜ்யமும் சக்கரவர்த்தியும் பிரஜைகளும் இருந்தால் அதற்கு ஒரு சட்டம் வேண்டும். இவைகள் எல்லாம் அநாதியானால், சட்டமும் அநாதி. அந்த அநாதி சட்டமே வேதம். இவற்றில் ராஜ்யமான பிரபஞ்சத்தை ''அநாதி'' என்றாலும் அவ்வப்போது அதற்கு உற்பத்தி உண்டு; அழிவும் உண்டு. சக்கரவர்த்தியான பரமாத்மாவும் சட்டமான வேதமுமே சாச்வதம்.

உலகம் உற்பத்தி ஆகிறது, வளர்கிறது, பிரளயம் அடைகிறது. திரும்பவும் உற்பத்தி ஆகிறது. வளர்கிறது. பிரளயம் அடைகிறது. இப்படியே சுற்றிச் சுற்றிக் கொண்டிருக்கிறது. சக்கரவர்த்தியும் சட்டமும் மாத்திரம் ஸ்திரம். ஒவ்வொரு ஸ்ருஷ்டியின் ஆரம்பத்திலும், அந்த சக்கரவர்த்தி அதிகார புருஷர்களை சிருஷ்டி செய்கிறான். அந்த அதிகாரிகளுக்கு வேண்டிய யோக சக்தியைக் கொடுக்கிறான். யோக சாஸ்திரத்தில் தன் ச்ரோத்திரத்திற்கும் வெளி ஆகாசத்திற்கும் அபேதமான ஒரு ஸாம்யம் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. அதை அனுஷ்டிக்கும்போது திவ்ய ச்ரோத்திரம் கிடைக்கிறதாம். அந்த திவ்ய ச்ரோத்திரத்தைக் கொண்டு வெளி ஆகாசத்தில் ஸ்திரமாய்க் கிடக்கும் அநாதி சப்த அலைகளை ஈசனுடைய அருள் சகாயத்தால் அந்த அதிகார புருஷர்கள் அடைகிறார்கள். அவர்களே முதல் முதலில் வேதத்தை அறிந்தவர்களாகிறார்கள். அவர்களே மந்திரத்துக்கு மஹரிஷிகள்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

விளம்பரப் பலகை திறப்பு விழா!

இராம.வீர

வாழ்க! பொன்மனச் செம்மல்!

இராஜ இராஜ சோழன் முதல் நேற்றைய தி.மு.க. ஆட்சி வரை விளம்பரப் பலகையை அரசு திறந்து நடத்தியதாகச் செய்தி கிடையாது! ஆகவே வரலாறு காணாத சரித்திரம் படைக்கிறார் நமது புரட்சித் தலைவர்!..







டாய் சோமாறிக் கய்தே! என்னை எவனாவது எதிர்த்து நின்னாக் கொலைச்சுப் புடுவேன் கொலைச்சு!..

பஞ்சாயத்துத் தேர்தலில் எனக்கே உங்கள் வாக்கு! .. இல்லாட்டி.. ஹும்.ம்!

உங்கள் பணிவன்புள்ள
கொசப்பேட்டை







மாற்றுக் கட்சியினருக்கு ஒரு விளம்பரப் பலகையைக் கூட ஒதுக்க மறுக்கும் எம்.ஜி.ஆர். சர்வாதிகார ஆட்சி ஒழிக! — தி.மு.க —
சத்துணவுக் குழந்தை பாரீர்! தாரீர் நிதி!


கிருஷ்ணா நதிநீர் வருகிறது! வந்து விட்டது!




கன்




அது வீரப்பன் கோஷ்டி பானர்.. இது ஜெயலலிதா கோஷ்டி பானர்.. ரெண்டு கோஷ்டிக்கும் இன்று அன்பு!.. பாத்தியா!..

ம்பரக்
ரம்!


இந்தக் கட்டை சொல்றேன்.. கேட்டுக்க.. இது பானரோடு நிக்கும்னு தோணலே!... அரசு பட்டாணி சுண்டல் வியாபாரம் பண்ணினதும் பண்ணும்பா!



## இரட்டிப்பு மகிழ்ச்சி

மாட்டு வண்டியை ஓட்டி வந்தவர் இறங்கி டீ குடிக்கப் போன சமயம் வண்டி மாடுகள் திடீரென்று மிரண்டு ஓட ஆரம்பித்தன. வண்டியில் அமர்ந்திருந்த ஓட்டுனரின் மனைவியும், பத்து நாட்களே நிரம்பிய கைக்குழந்தையும் அலறியதைக் கேட்டு வண்டியைத் தொடர்ந்து ஓடி, காளைகளை அடக்கித் தாயையும் சேயையும் காப்பாற்றிய எங்கள் ஊர் ஹீரோ என் கணவர்தான் என்பதில் பெருமை கொள்கிறேன்.

— டி. ஜெயந்தி, திருச்சி — 20.

## எதற்கும் தயார்

எங்கள் ஜோர்து நகரின் ஹீரோ இளைஞர் கே. ஏ. நடராஜன். தொழுநோயாளர் மற்றும் குடிசை வாழ்வோர் நலனுக்காத் தன்னலமற்ற தொண்டு புரிந்து வருகிறார். கழிவு நீரையே குடி நீராக உபயோகித்து வந்த இப்பகுதி மக்களுக்குக் குடிநீர் கிடைக்க வழி செய்துள்ளார். மேலும் 25 வருடங்களாக வாக்குரிமை பறிக்கப்பட்டிருந்த பலரது பெயரை மீண்டும் வாக்காளர் பட்டியலில் சேர்க்க வழி செய்தவர். வங்கிக் கடனா? பள்ளி அட்மிஷனா? போலீஸ் கம்ப்ளெண்டா? எதுவானாலும் இரவு பகல் பாராமல் உதவ இவர் தயார். அனாதைப் பெண் ஒருத்தியைக் கலப்பு மணம் புரிந்து கொண்டு வாழ்வளித்துள்ளார்.

— பொன்னம்மா, தஞ்சாவூர் — 1.

## ஹீரோ மாப்பிள்ளை

முகூர்த்தம் நெருங்கிவிட்டது. வரதட்சணைப் பணம் 'முழுதும்' வரவில்லை என்பதால் தாலி கட்ட மறுத்துவிட்டார் மாப்பிள்ளை. கண்ணீரும் கம்பலையுமாகப் பெண் வீட்டார் கையைப் பிசைந்து கொண்டு நிற்கையில் சற்றும் எதிர்பாராத விதமாக எங்கள் பக்கத்து வீட்டில் வசிக்கும் வாலிபர் ஜாதி வித்தியாசம் பாராட்டாமல் அப்பெண்ணை மணக்க முன்வந்தார். அவள் சம்மதத்துடன் அதே முகூர்த்தத்தில் அவ்விருவரும் கணவன் மனைவி ஆயினர். அன்று முதல் அவரே எங்கள் ஊர் ஹீரோ.

— ஜெ. மீனா, பம்பாய் — 71.

## முயற்சியில் தளர்ச்சி இல்லை

எங்கள் தெருவிலுள்ள முருகன் கோயில் அருகிலேயே சாராயக் கடை திறந்துவிட்டனர். அதை எதிர்த்து வீரமணி என்கிற எங்கள் தெருவாசி பெரிய போராட்டமே செய்தார். விளைவு: முதலில் அவர்தான் அந்தெருவை விட்டு வெளியேறும்படி நேர்ந்தது. இருப்பினும் தொடர்ந்து முயற்சி செய்து சாராயக் கடையையும் இடம் பெயரச் செய்துவிட்டார்.

— ஆர். எஸ். இராஜ், சீர்காழி.

## 'சேட்ஜி'

சிவசேனா கலவரத்தின்போது, ஒரு தமிழ்ப் பெண்ணைக் காப்பாற்றும் முயற்சியில் கையில் வெட்டுப்பட்டவர்; தமிழர்களுக்கு வேலைவாய்ப்பு அளித்தவர்; பம்பாய் சயான்—கோலிவாடா பகுதியில் விநாயகருக்கு ஆலயம் கட்டியவர்; ஆண்டு தோறும் தம் செலவில் புராணச் சொற்பொழிவுகள் நடத்த ஏற்பாடு செய்பவர் — 'சேட்ஜி' என்று அனைவரும் அன்புடன் அழைக்கும் இந்த ஹீரோவின் பெயர் — நாராயணன்.

— ஆர். நாகலட்சுமி, பம்பாய் — 37.

## கடல்மல்லையின் கட்டவிழ்ந்தது

எமர்ஜென்ஸி காலத்தில் உலகப்புகழ் கடற்கரை கோயிலைச் சுற்றி இரும்புச் சங்கிலிகள் கட்டி வைத்துச் சுற்றுலாப் பயணிகள் உட்புகா வண்ணம் தடை செய்துவிட்டதைத் தொடர்ந்து என். ஜனார்த்தனம் என்பவர் மத்திய அரசுடன் கடுமையாகப் போராடி வெற்றி கண்டார். கடல்மல்லையின் அடிமைத்தளை அகன்றது.

— ஆர். சாம்பசிவம், மாமல்லபுரம்.

## ஆத்மார்த்த சேவகர்

கரந்தானேரியின் பத்திரப் பதிவு அலுவலகத்தில் ஊழியராகப் பணியாற்றும் பிரேமநாயகம், பக்தி சிரத்தையுடன் கோயில் காரி

# எங்கள் ஊர்





யங்களைச் செய்துவருபவர். பொதுக் காரியங்களை முன்னின்று நடத்துபவர். இவ்வூருக்கு மின்சாரம் வந்த புதிதில் பிள்ளையார் கோயிலில் தம் செலவில் முதல் மின் விளக்கை அமைத்து அதில் தம் பெயரையும் பொறித்து விட்டார். ஒரு சாதாரண ஊழியர் இந்த நல்ல காரியம் செய்ததைப் பார்த்துப் பல பெரிய பிரமுகர்களும் அவ்வாறே செய்தனர். இப்போது கோயில் ஜகஜ்ஜோதியாக் ஜொலிக்கிறது.

— ஜி. சுப்புலட்சுமி, கரந்தானேரி.

**அமரர் ஆனூர்**

வைகையில் பெரு வெள்ளம். ஆற்றின் நடுவே உள்ள மண்டபத்தில் சிக்கித் தவித்த ஆறு நபர்களைக் காப்பாற்றிய அந்த ஹீரோவால் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியவில்லை. இந்த ஹீரோ மதுரை தீயணைப்புப் படையைச் சேர்ந்த நண்பர் அமரர் முத்துக்குமார் ஆவார்.

— எஸ். சுப்புலக்ஷ்மி தீபா, மதுரை — 1.

**நல்லவனுக்கு நல்லவன்**

ரிக்ஷாக்காரன் லோகு நல்லவனுக்கு நல்லவன். பொல்லாதவனுக்குப் பொல்லாதவன். அண்டை வீட்டில் திருட்டுப் போனபோது, தான் சந்தேகித்த ஒருவனைக் கண்காணித்து, அடுத்த முறை அவன் திருட முயன்றபோது, கையும் களவுமாய்ப் பிடித்து, போலீஸில் ஒப்படைத்தான். ரத்ததானம் செய்வது, ஏழைகளிடம் பணம் வாங்காமல் ரிக்ஷா சவாரி அளிப்பது இவையெல்லாமாய் அவனை ஹீரோ ஸ்தானத்துக்கு உயர்த்திவிட்டன.

— பி. எஸ். பகவந்தம் குப்தா, வேலூர்.

**அஞ்சா நெஞ்சினர்**

ஓய்வு பெற்ற ராணுவ அதிகாரி மேஜர் கிருஷ்ணன் என்றால் ஊரே 'அடென்ஷ'னில் நிற்கும். 200 குடிசைகள் தீப்பற்றி எரிந்த போது, எல்லோரும் பிரமித்துப் போய்ப் பார்த்துக் கொண்டிருக்கையில், ஆவேசத்

# ஹீரோ!

## வாசகர் பங்கு

துடன் தீ நாக்குகளைப் பொருட்படுத்தாமல், குடிசை குடிசையாக நுழைந்து பதினெட்டுப் பேர்களைக் காப்பாற்றினர் மேஜர். விளைவாக மூன்று மாதங்கள் ஆஸ்பத்திரியில் கழித்தார்.

— நீரஜா மூர்த்தி, பெங்களூர்— 19.

### கருணையின் உறைவிடம் கலந்தர்

1977 இல் வெள்ளம் ஏற்பட்டபோது 12 பேரைக் காப்பாற்றி தங்கப் பதக்கம் பெற்ற கலந்தர் அதே அளவு கருணையையும் அன்பையும் வாயில்லா ஜீவன்களிடமும் கொண்டுள்ளார். மொட்டைக் கிணற்றில் விழுந்து விட்ட பசுவைக்காப்பாற்றயாருமே முயற்சி எடுத்துக் கொள்ளாதபோது, வன விலங்கு காப்பாளரிடம் தெரிவித்து அந்தப் பிராணியை மீட்கத் தாமும் கிணற்றில் இறங்கி உதவி செய்தார்.

— எஸ். சேதுமாதவன், திருச்சி— 20.

### யானையும் பிழைத்தது; பாகனும் பிழைத்தான்.

பாடலீஸ்வரர் ஆலயத்து யானைக்கு மதம் பிடித்துப் பாகனை மிதித்துத் தள்ளிவிட்டது. ஊர் மக்களும், காவல் துறையினரும் யானையைக் கொன்றுவிட்டுத்தான் பாகனை மீட்க முடியும் என்று முடிவு செய்துவிட்டிருந்தனர். சேகர் என்ற இளைஞர் கண்ணிமைக்கும் நேரத்தில் யானைக்கு மிக அருகே சென்று பாகனைத் தூக்கி வந்துவிட்டார். இன்று அந்த ஹீரோ காவல்துறையில் பொறுப்பான பதவி வகிக்கிறார்.

— டி. பிரதாப், கடலூர்— 2.

### அடாத மழையிலும்...

இயற்கை எங்களுக்கு எதிராகச் சதி செய்து கொண்டிருந்தது. மனைவிக்குப் பேறு காலம். 27 மைல் தொலைவில் உள்ள ஆஸ்பத்திரிக்குப் போனால்தான் தாயும் சேயும்



பிழைக்க முடியும் என்ற நிலை. எந்த வாகனமும் ஓடாத சமயத்தில் 4½ மணி நேரம் கொட்டும் மழையிலும் வெள்ளத்திலும் போராடி எங்களை ஆஸ்பத்திரிக்குக்கொண்டு சேர்த்து, இரண்டு உயிர்கள் பிழைக்கக் காரணமாய் இருந்தார் டாக்ஸி டிரைவர் ராஜேந்திரன்.

— எஸ். இளங்கோவன், குரும்பூர் அஞ்சல்

### பொதுநல நண்பன்

திருச்சியில் நுகர்வோர் பாதுகாப்புக் குழு அமைத்து திறம்படச் சேவை செய்து வருகிறார் புஷ்பவனம். சமீபத்தில் ஏ. ஸி. வசதியுள்ள திரைப்பட அரங்கில் ஏ. ஸி. போடாமலே கட்டணம் வசூலித்து வந்ததை எதிர்த்துப் போராடி ஏ. ஸி. போட வைத்தது ஒரு சிறு உதாரணம்.

— ராஜிராதா, திருச்சி— 18.

---

பையன் (1): "நம் கல்வி முறை சரியாக இருக்கா?"

பையன் (2): "கல்வி முறை சரியாகத்தான் இருக்கு! மார்க் போடற முறைதான் சரியாக இல்லே!"

உ. ராஜாஜி.






புளோபிளாஸ்ட் வழங்கும் வி. ஐ. பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:

எஸ். சுப்புலக்ஷ்மி தீபா,
48 B, சுருகப்பிள்ளைகார தெரு,
மதுரை — 625 001.



# மிகப் புதியதான காஸ்கட் ரிலீஸ் ஸிஸ்டம்

# MAJESTIC ®







## இந்தியாவின் 100% பாதுகாப்பான பிரஷர் குக்கரை உருவாக்குகிறது

உங்கள் நேரம், பணம், எரிபொருள் மூன்றும் தொடர்ந்து மிச்சப்படுகின்றன.

உணவின் மணமும், ருசியும் மாறாமலும் வைட்டமின்கள் சக்தி குறையாமலும் பாதுகாக்கப்படுகிறது.

3 லிட்டர் முதல் 12.5 லிட்டர் வரை உள்ள மெஜெஸ்டிக் குக்கர்களும், அவை சம்பந்தப்பட்ட இதர பாத்திரங்களும் அலுமினியம் மற்றும் எவர் சில்வரில் கிடைக்கின்றன.

## எங்கள் மற்றைய பிரபலமான விசில் செய்யும் சமையலறைத் துணைகள்.












ரைஸ் குக்கர், மில்க் பாய்லர் இட்லி குக்கர் பிரஷர் பான்

DISTRIBUTORS FOR TAMILNADU **Naik** BROTHERS

56, Purushwalkam High Road, 1st floor, MADRAS -7 Phone: 662965 661034

## ராஜாஜி வாழ்க்கை வரலாறு
### ராஜ்மோகன் காந்தி
• 16


• சீதாராமையா

# திரிபுரா

காங்கிரஸுக்கு ஒரு தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய வேளை மீண்டும் வந்தது. இது வரை எந்த வித வாக்கு வாதமோ தேர்தலோ கூட இல்லாமல் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவதே வழக்கமாயிருந்தது. மகாத்மா மாகாண காங்கிரஸ் கமிட்டிகள் சிபாரிசு செய்த நபர்களின் பெயர் பட்டியலை ஆராய்ந்து விட்டு அப்போதைய சூழ்நிலையையும் காங்கிரஸ்காரர்களின் மனநிலையையும் கணித்து, இறுதியில் முள் கிரீடத்தை அணியத் தகுதியுடையவராகத் தாம் கருதியவரைத் தேர்ந்தெடுத்தார். இம்முறை அவர் ஆஜாதைத் தேர்ந்தெடுத்தார். ஆரம்பத்தில் இணங்கிய ஆஜாத், போஸ் மீண்டும் ஒரு முறை பதவி ஏற்க விரும்புவதை அறிந்ததும் பின் வாங்கி விட்டார். இரண்டாம் முறையாக ஒருவர் தலைமையை ஏற்பது என்பது புதிதல்ல. ஏற்கெனவே ஜவாஹர்லால் இரண்டு முறை தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். ஆனால் சில முக்கியமான அடிப்படை விஷயங்களில் மகாத்மாவுடன் போஸ் ஒத்துப் போகவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது.

மீண்டும் தேர்தலில் நிற்க வேண்டாம் என்று மகாத்மா அறிவுரை கூறியும் போஸ் பிடிவாதமாக இருந்தார். பட்டாபி சீதாராமையாவை போஸுக்கு எதிராகப் போட்டியிடச் சொன்னார் காந்தி.

பட்டாபிக்கு காந்தியின் ஆசிகள் இருந்ததென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமானாலும் போஸ் 1580 வாக்குகள் பெற்று வென்றார். 1375 வாக்குகளே பெற்றார் பட்டாபி சீதாராமையா.

இப்போது மூன்று வழிகள் இருந்தன; முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட போஸைத் தலைமை ஏற்க அனுமதித்து, மகாத்மாவின் தலைமையை நிராகரிப்பது ஒன்று. இரண்டாவது, காந்தியின் தலைமையையே ஏற்றுப் போஸைப் பெயரளவில் பொம்மைத் தலைவராய் இயங்க விடுவது; மூன்றாவது, சமரசத்துக்கு முயல்வது.

முதல் இரண்டு வழிகளும் நடைமுறைக்கு ஒத்து வராது என்று உணர்ந்த போஸ், மூன்றாவது வழியைச் செயல்படுத்த முயன்றார். ஆனால் முதிய தலைவர்கள் சமரசம் செய்து கொள்வதை விரும்பவில்லை. போஸின் போக்கு முதியவர்கள் மனத்தை வெகுவாகப் புண்படுத்தியிருந்தது. அதோடு போஸுடன் அவர்களுக்கு இருந்த விரிவான கருத்து மாறுபாடு எந்தவித சமரசத்தையும் அனுமதிக்காது என்று அவர்கள் கருதினார்கள்.

நர்மதை நதிக் கரையில் நடந்த திரிபுரா காங்கிரஸ் மாநாட்டுக்கு உடல்நிலை மிக மோசமாக இருந்த போதிலும் சுபாஷ் வந்திருந்தார்.. மகாத்மா வரவில்லை. ராஜ்கோட் சமஸ்தானத்தில் நடந்த ஒரு சிறிய சம்பவத்துக்காக உண்ணாவிரதம் அனுஷ்டித்துக் கொண்டிருந்தார். ஸி. ஆருக்குப் போஸின் வெற்றி பிடிக்கவில்லை. பல தமிழர் வாக்குகள் போஸுக்குக் கிடைத்திருந்தது அவருக்குக் கூடுதலான வருத்தம் அளித்தது. 'சென்னை நகரமானது எதிர்காலத்தில் நிறுவப்படக் கூடிய ஆந்திர மாகாணத்துடன் இணைய வேண்டும்' என்று பட்டாபி கூறியிருந்ததே தமிழர் வோட்டு சுபாஷுக்குக் கிடைக்கக் காரணம். போஸுடைய தீவிர திட்டங்கள் ஸி. ஆரைக் கவரவில்லை. அவரைப் பொறுத்த வரையில் மூன்று வழிகளுள் இரண்டாவது வழியே பின்பற்றத் தக்கதாய் இருந்தது. எனவே அதற்கு அனுசரணையாக ஒரு தீர்மானம் வடிவமைப்பதில் முக்கிய பங்கேற்றார் ஸி. ஆர். அத்தீர்மானமானது சுபாஷ் முதிய

'தலைவர்கள் மீது குற்றம் சாட்டியதற்கு வருத்தம் தெரிவித்தது. மேலும், காங்கிரஸ் தலைவரை, காந்திஜியின் விருப்பத்தை அனுசரித்து ஒரு செயற்குழுவை நியமிக்குமாறும் கேட்டுக் கொண்டது.

உத்தரப்பிரதேசப் பிரதம மந்திரி பந்த் இத்தீர்மானத்தை முன்மொழிந்தார். அதை ஆமோதித்து ஸி. ஆர். பேசினார். சுற்றி வளைக்காத அவரது நேரடிப் பேச்சு சம்பிரதாயவாதிகளை மகிழ்வித்தது. மதில்மேல்பூனையாக இருந்த பலரை மூத்த தலைவர்கள் பக்கமாக இழுத்தது. திரிபுரா மாநாட்டில் ஆவேசம் பொங்கிய போதிலும் ஸி. ஆர். பேசுகையில் பூரண அமைதி நிலவியது. அவர் சொன்னார்:

''ஆற்றில் இரண்டு படகுகள் உள்ளன. ஒன்று பழைய படகு. ஆனால், மகாத்மா காந்தியால் செலுத்தப்படும் பெரிய படகு. மற்றொரு மனிதரிடம் புதிய படகு உள்ளது. கண் கவர் வண்ணத்தில், கொடி அசைய நிற்கிறது. மகாத்மா காந்தி ஓர் அனுபவம் மிக்க படகோட்டி. உங்களைப் பத்திரமாகக் கரை சேர்ப்பார். மற்றொரு படகில் ஓட்டை இருக்கிறது என்று எனக்குத் தெரியும். அதில் நீங்கள் ஏறினால் ஒட்டுமொத்தமாக மூழ்கி விடுவீர்கள் — நர்மதை நதி மிக ஆழமானது!

# காங்கிரஸ்

''புதிய படகோட்டி சொல்கிறார்: 'என் படகில் நீங்கள் ஏறவிட்டால் பாதகமில்லை. உங்கள் படகுடன் என் படகை இணைத்துக் கொள்ளவாவது செய்யுங்கள்' என்று. இதுவும் நடக்க முடியாத காரியம். ஓட்டைப் படகை நல்ல படகுடன் இணைத்துக் கொண்டால் நாமும் மூழ்கிப் போகும் ஆபத்தை வலியச் சென்று விலைக்கு வாங்கியவர்களாவோம். மகாத்மா காந்தியின் தலைமையை இருபது வருடங்களாக ஏற்று வந்திருக்கிறோம். அதில் திருப்தி அடைந்திருக்கிறோம். அவர் உள்ளதைச் சொல்பவர்—சொல்வதைச் செய்பவர்.

''புதிய படகில் இப்போதைக்கு ஏறிக் கொள்ளலாம். பிறகு பழைய படகுக்கே திரும்பி விடலாம் என்று எண்ணாதீர்கள். உயிர் பிழைத்தாலல்லவா பழைய படகுக்குத் திரும்ப முடியும்? புதிய படகு நான் ஏற்கெனவே கூறியது போல் ஒரு ஓட்டைப்படகு!''

தீர்மானம் நிறைவேறியது. படகோட்டிகளை போற்றப்பட்டது. சுபாஷ் போஸ் ராஜினாமா செய்தார். கல்கத்தாவில் நடந்த கூட்டம் ஒன்றில் காங்கிரஸ், ராஜன் பாபுவை சுபாஷ் போஸ் காலி செய்த இடத்தை இட்டு நிரப்புமாறு கேட்டுக் கொண்டது. ஆனால் வங்காளம் தன் அருமைப் புதல்வனுக்கு எதிராக ஸி. ஆர். கூறியவற்றை மறக்கவேயில்லை. ஒன்பது வருடங்கள் கழித்து மேற்கு வங்காள கவர்னராகப் பதவியேற்க ஸி. ஆர். கல்கத்தா வந்தபோது, ''ஓட்டைப்படகு! ஓட்டைப் படகு!'' என்ற கோஷங்கள் எழும்பி ஸி. ஆருக்குத் திரிபுரா காங்கிரஸை நினைவூட்டின.

தமிழாக்கம்: சீதாரவி.

(ராஜாஜி வாழ்க்கை வரலாறு—இரண்டாம் பாகத்தின் முதல் பகுதி முற்றிற்று. அடுத்த பகுதி டிசம்பரில் ராஜாஜி பிறந்த தினத்தையொட்டி ஆரம்பமாகும்)



* போஸ்

# வெங்கட் செய்த ஆம்லெட்

"என்ன அத்தி, ஆம்லெட்டுனு சொன்னதும் ஆளே மாறிட்டீங்க. நான் செய்து தரவா?" ஆசை காட்டினான் அவன்.
"சத்தமாப் பேசாதே வெங்கட். உங்கக்கா காதில் விழுந்தால் நம்ம ரெண்டு பேரையுமே தூக்கிக் கோழிப் பண்ணையில் எறிந்து விடுவாள்."

அடையாறுபோகிறபஸ்ஸுக்காகஸ்டாப்பில் நின்று தவம் செய்து கொண்டிருந்த போது என் முதுகில் பின்புறமாகப் பளாரென்று யாரோ அறைந்தார்கள்.

நான் முகமூடிக் கொள்ளைக்காரன்தான் எவனாவது வந்து விட்டானோ என்று பயத்துடன் திரும்பிப் பார்த்த போது அங்கே... என் மைத்துனன் வெங்கட் "ஹாய் அத்தி சௌக்கியமா?" என்று ஸ்லாங் போட்டுத் தமிழ் பேசிய வண்ணம் நின்றிருந்தான்.

வெங்கட் என் ஒரே மனைவியின் அருமை ஸாரி மனைவியின் ஒரே தம்பி!

சென்னை ஐ.ஐ.டி.யில்எம்.டெக்.முடித்து விட்டு அமெரிக்கப் பல்கலைக் கழகமொன்றில் டாக்டரேட் செய்து கொண்டிருந்தான்.

கொஞ்சம் கலகலப்பான இளைஞன்.

கூட நிறையக் குறும்பும் உண்டு.

"என்ன வெங்கட், இப்படிப் புயல்மாதிரி திடீர்னு வந்து நிக்கறே?" நான் ஆச்சரியப்பட்டுப் போவதற்குள்...

"ஏறுங்க அத்தி" என்று அவன் என்னை முழுசாகப் பிடித்து டாக்ஸியில் அடைத்துக் கொண்டான்.

"ஒங்களுக்கு ஒரு சர்ப்ரைஸ் கொடுக்கணும்னு பார்த்டேன், ஹவ் ஈஸ் ஸிஸ்?"

"டேய் என்கிட்டே மாத்திரம் இப்படி பாஷையைக் கொலை பண்ணுதேடா. நீ அமெரிக்காவிலே படிக்கிறது எனக்குத் தெரியும். ஆமாம் நீ என்ன ஆளே இப்படி மாறிட்டே! உடம்பு சரியில்லையா?" என்றேன்.

"ஓ நோ... இப்பதான் நான் டிரிம்மா சௌக்கியமா இருக்கேன். அதன் ரகசியம் சொல்லட்டா? அன் ஆம்லெட் எ டே கீப்ஸ் தி டாக்டர் அவே. அதுதான் கீப்ஸ் மி ஃபிட்."

"ஐயோ... ஆம்லெட்டா?" நினைத்த போதே என் நாக்கில்நர்மதை பெருக்கெடுத்தாள். ஆம்லெட் நெய்யில் முறுகுகிற மணத்தைக் கற்பனை செய்து கொள்ளுகையில் என் மனைவி அபர்ணாவும் கையில் அப்பளக்குழவி சகிதம் பற்களை நறநறவென்று கடித்துக் கொண்டு கார்டூனிஸ்ட் மரியோ போட்ட சித்திரம் போல்பிரசன்னமானாள்.

உலகத்தில் மற்ற கணவன்மார்கள் எப்படியோ தெரியாது. நான் அமைதிப்பிரியன்.

ரோகிணி பாஸ்கரா யுகத்திலும் அவள் கொஞ்சம் ஓல்ட் மாடல்.என் அபிப்ராயப்படி அவள் கட்டை வண்டி ஸ்டேஜையே இப்போதுதான் தாண்டி இருந்தாள். பத்து, எட்டு, என்று சமையலறையையே தினமும் குளிப்பாட்டி எடுப்பவள்.

மாதம் மூன்று நாட்கள் என்னை காஸ் அடுப்புடன் குஸ்தியடிக்க விட்டுவிட்டு அஞ்ஞாத வாசம் செய்பவள்.

சரியான பஞ்சாங்கம்!

திருமணமான புதிதில் வெங்காயம் என்றாலே மூக்கைப் பிடித்துக் கொள்ளுவாள்.

எனக்குப் பற்றிக் கொண்டு வந்தது.

வெங்காயம் சாப்பிடாமல் ஒரு வாழ்க்கையா? "உனக்குப் பிடிக்காவிட்டால்பரவாயில்லை. நீ சமைத்தே தீரணும்" என்று வாதாடினேன். "நான் சுத்த சைவம்"- அவள் மறுத்தாள்.

"நான் வெங்காயம் சாப்பிடுகிற அகத்த சைவம்னு வெச்சுக்க. இந்த அளவுக்குக் கூட அட்ஜஸ்ட் பண்ணிக் கொள்ள முடியாட்டா கோர்ட்டில்சந்திக்கலாம்" என்றுநான் சவால் விட்டதற்கு மேல் அடங்கிப் போனாள் அவள். ஆனால் அவள் முன்னேற்றம் அதோடு சரி.

முட்டை என்று சொன்னாலே காலுக்கடியில் மாட்டிக் கொண்ட கோழிக் குஞ்சைப் போல் அலறினாள் அவள். அதனால் அந்த வழியில் தொடர்ந்து பரிசோதனை நடத்த விருப்பமின்றி விட்டு விட்டேன்.

"என்ன அத்தி ஆம்லட்டுனு சொன்னதும் ஆளே மாறிட்டீங்க. நான் செய்து தரவா?" ஆசை காட்டினான் அவன்.

"சத்தமாப் பேசாதே வெங்கட். உங்கக்கா காதில் விழுந்தால்நம்ம ரெண்டு பேரையுமே தூக்கிக் கோழிப் பண்ணையில் எறிந்து விடுவாள்."

"போங்க அத்தி. இத்தனை படித்த நீங்களே மனைவிக்கு இப்படி அடிமைப்படுவதா? உங்களுக்காகவாவது இந்த நாட்டில்நான் மென்ஸ் லிப் இயக்கத்தைத் துவக்கணும்."

"நீ கட்டை பிரம்மச்சாரி. அதனால் தைரியமாப் பேசறே, பேசு."

"நான் அக்காவைச் சமாளிக்கிறேன்.

நீங்க இறங்கி ரொட்டியும் முட்டையும் வாங்குங்கள்'' வெங்கட் என் வீர உணர்வுக்கு ஊக்கமளித்து டாக்ஸியை நிறுத்தச் சொன்னான்.

நான் குற்ற உணர்வுடன் அவன் சொன்னதைச் செய்தேன்.

வீட்டுக்கு வந்ததும், ''அடே... வெங்கட் நீயா?'' அபர்ணா மூக்கில் விரலை வைத்து ஆச்சரியப்பட்டாள்.

''அத்திம்பேர்... அக்கா மூக்கிலிருந்து விரலை எடுப்பதற்குள் முட்டைகளைக் கொண்டு வந்து மூலையிலிருக்கும் அரிசி மூட்டைக்குப் பின்னால் ஒளித்து வையுங்கள்'' வெங்கட் கிசுகிசுத்தான்.

அபர்ணாவுக்கு அது காதில்விழுந்து வைக்க அவள் துள்ளிப் பின்வாங்கினாள்.

''இல்லை மூட்டை... அரிசி மூட்டை.''

''உங்க அத்திம்பேர் கையில் என்ன?'' நிஷ்டூரமாகக் கேட்டாள்.

''ஓ சிஸ்... கோபப்படறியே. பொறுத்தவர்கள் மிக்ஸியாளலாம்.''

''என்னது மிக்ஸியா?'' அபர்ணா மந்திரத்துக்குக் கட்டுண்டவள் போல் அடங்கிப் போனாள். முகத்தில் அரை சென்டிமீட்டர் அளவுக்குப் புன்னகை விரிந்தது.

''நல்ல சமயமடா... இதை நழுவ விடுவாயோ?'' என்று விசிலடித்த வண்ணம் சாமான்களை இறக்கி டாக்ஸிக்கு டாட்டா சொல்லிவிட்டு வந்தான் வெங்கட்.

# லக்ஷ்மி ரமணன்

''முட்டையை எங்கே வைக்க?'' நான் தீர்மானிக்க முடியாமல் கேட்டேன்.

''அதற்கு என்ன ஆசனம் வேண்டிக் கிடக்கு. அதோ அந்த மூலையில் வையுங்கள்.''

''அப்பாடா...'' என்று நிம்மதியாக இருந்தது அதை இறக்கி வைத்ததும்.

வெங்கட் தான் வாங்கி வந்த புடவை, சோப்பு, ஷாம்பூ, பவுடர், மிக்ஸி, காஸ்லைட்டர், மெல்மெக் செட் எல்லாவற்றையும் எடுத்துப் பரப்பியதும் அபர்ணா குல்மார்க்காகக் குளிர்ந்து போனாள்.

சமயோசிதமாக வெங்கட், ''அக்கா உன் காஸ் அடுப்பைக் கொஞ்சம் உபயோகிக்கலாமா?'' என்று மனுப் போட்டான்.

''ஹாம்லெட் பண்ணவா... அதுதான் முடியாது.''



''ப்ளீஸ் அக்கா... ப்ளீஸ்.''

''போனால்போகட்டும்னு ப்ளையஸ்டவ்வா தரேன்.''

அவள் தாராள மனத்தை நாங்கள் பாராட்டிக் கொண்டே ஸ்டவ்வைப் பரிசீலனை செய்தோம்.

''அக்கா... இதுதான் இந்தியாவில் தயார் செய்த முதல் ஸ்டவ்வா?''

''ஏன்?''

''அத்தனை பழசாக இருக்கு. போதாததற்கு ஏகப்பட்ட ஆக்ஸிடென்ட் ஆன மாதிரி அத்தனை நசுங்கல்.''

''உங்க ஹாம்லெட்டோ ஜூலியட்டோ பண்ண இந்த லட்சணமான ஸ்டவ் போதாதாக்கும்.

''அதானே... கொஞ்சம் ஏமாந்தால் ஷேக்ஸ்பியரையே தோசைக் கல்லில் போட்டு வார்த்து எடுத்துடுவே போல இருக்கே.''

''போதும்டா உன் கிண்டல்.'' அபர்ணா முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

ஸ்டவ்வைப் பற்ற வைத்ததும் அது ஒரு பக்கம் 'ரவுடி மாதிரி கண்ணடித்தது. 'பக் பக்' என்று சப்தம் போட்டுச் சிரித்தது.

நான் கவலையுடன் வெங்கட்டைப் பார்த்தேன்.

''பரவாயில்லை அத்தி, சமாளிக்கலாம்'' என்று தைரியம் சொன்னான் அவன்.

''உன் தலை! முட்டையை உடைத்து என் தலையிலா கவிழ்க்கப் போறே. அதை அடிக்க ஒரு பாத்திரம் வேண்டாமா? ஆம்லெட் பண்ண ஒரு தோசைக் கல்லோ **Frying Pan**—னோ வேண்டாமா?''

''தோசைக்கல்லா...அதெல்லாம்கொடுக்க முடியாது'' என்று எங்கள் திட்டத்தில்கல்லைப் போட்டாள் அபர்ணா.

''**Bravo** அத்திம்பேர், அக்கம்பக்கத்தில் எங்காவது பிச்சை எடுத்து வாருங்கள். அதற்குள் நான் ஏற்பாடு செய்து கொள்ளுகிறேன'' என்று சட்டை, பான்ட்டைக் கழற்றி லுங்கிகட்டிக்கொண்டுவராந்தாவில்அமர்ந்து வெங்காயத்தை ஆவேசத்துடன் நறுக்கத் துவங்கினான் அவன்.

முட்டையை உடைத்து ஊற்ற வேண்டும் என்று ரொம்பக் கெஞ்சியபின் ரொம்ப நசுங்கி வாய் கோணிக் கிடந்த அலுமினியம் கிண்ணத்தை அபர்ணா,சிவராமகிருஷ்ணன் எறிந்த 'ஸ்பின் பந்தைப் போல்' விட்டெறிய வெங்கட் அதை இடது கையால் காட்ச் பிடித்துக் கொண்டு, ''தோசைக் கல்தான் பாக்கி'' என்று நினைவூட்டினான்.

நான் கீழ் வீட்டுக்குத் தயங்கியவாறு போன போது காமாட்சி மாமி வாசலிலேயே நின்று கொண்டு, ''வாங்க... ராகவன், அபர்ணா வெங்காய சாம்பார் வைக்கிறாளா என்ன வாசனை துளைக்கறதே'' என்று வரவேற்றாள். நான் விஷயத்தை விளக்கினதும் அதற்கென்றே அவர்கள் வீட்டில் வாங்கி வைத்திருந்த காவலியை எடுத்துக் கொடுத்தாள் மாமி.

''ரொம்ப தாங்க்ஸ் மாமி.''

நான் நன்றியறிவித்துவிட்டு நாலே எட்டில் திரும்பி வந்தேன்.

பின் வராந்தாவில் அழுது கொண்டே வெங்கட் வெங்காயம் நறுக்கி முடித்திருந்தான்.

''அபர்ணா, முட்டையடிக்க ஒரு ஸ்பூனும் ஒரு கிண்ணத்தில் கொஞ்சம் நெய்யோ எண்ணெயோ வேணும்.''

''இன்னொரு கிண்ணமா!முடியாது.''

பதினைந்து நிமிடம் கெஞ்சியும் வழி பிறக்கவில்லை.

''அத்தி, உங்களுக்கு அப்ஜெக்ஷன் இல்லேன்னா என் ஷேவிங் கப் இருக்கு. சுத்தமா அலம்பி வெச்சிருக்கேன்.''

''அடப்பாவி, அப்படியாவது அந்த ஆம்லெட் சாப்பிடாட்டா என்ன?'' அபர்ணா கோபப்பட்டாள்.

''உஷ் அக்கா... ஏற்கெனவே எனக்கு மதராஸ் வெயில்தாங்கல்லே. நீ வேறு கோபப்பட்டு என் புழுக்கத்தைக் கிளப்பறே. ஆபத்துக்கு தோஷமில்லே. அத்தி இந்தாங்க'' அவன் ஷேவிங் கிண்ணத்தை அலம்பிக் கொடுத்தான்.

''கண்றாவி...., கண்றாவி'' அபர்ணா முணுமுணுத்தவாறு அதில் நெய்யைச் சரித்தாள். எல்லா உபகரணங்களையும் தயார் செய்து கொண்டு முட்டைகளைத் தேடிய போது கிடைக்கவில்லை.

''இங்கேதானே இந்த மூலையில் வைத்தேன்'' நான் மீண்டும் தேடினேன். கிடைக்கவில்லை.

''சரியான இடத்தில்தேடுங்க அத்தி'' நான் மறுபடி தேடிய போது...

ஆறு முட்டைகளும் உடைந்து மல்லாந்து கிடந்தன.

'வீல்' என்று சமையலறையிலிருந்து அலறினாள் அபர்ணா.

நான் மெல்ல எட்டிப் பார்த்தேன்.

ஒன்றன்பின் ஒன்றாக ஆறு கோழிக் குஞ்சுகள் தடுமாறிய வண்ணம் சமையலறையில் நுழைந்து கொண்டிருந்தன!

**''அம்மா! உனக்கு இப்ப வயசு எவ்வளவு?**

**''முப்பத்திரண்டு.''**

**''பின்னே உனக்கு இப்ப மூணாவது 'மாசம்னு கொஞ்சம் முன்னே பக்கத்து விட்டு ஆன்டிகிட்டே சொன்னியே!''**

**— உதய்.**





ஹார்லிக்ஸ் எங்களுடைய குடும்ப நண்பன். ஆபீஸிலிருந்து களைப்புடன் திரும்பிவரும் என் கணவருக்கு, காலேஜ் மற்றும் டான்ஸ் கிளாஸை முடித்துக் கொண்டு வரும் என் பெண்ணிற்கு, ஸ்கூல் முடிந்து திரும்பும் ஃபுட்பால் வீரனை என் பையனிற்கு—ஏன், தினமும் கடைகண்ணி போய் திரும்பும் எனக்கும்தான்—ஹார்லிக்ஸின் துணை ரொம்ப முக்கியம். எங்கள் குடும்பத்தின் நலனிற்காக நான் ஹார்லிக்ஸையே நம்பறேன்.

மால்டெட் பார்லி, முழு ஆடைப் பால் மற்றும் பொன்னிற கோதுமைக்கொண்ட ஹார்லிக்ஸ் ஒரு சுவையான, சத்தான பானம். ஊட்டச்சத்திற்கு மூலாதாரமான ஒரு லட்சிய பானமென்ற நம்பிக்கையை பெற்றது. எனவே, கடந்த நூறு வருடங்களாக கோடிக்கணக்கான குடும்பங்கள் உலகமெங்கும் ஹார்லிக்ஸின்மேல் நம்பிக்கை வைத்து வருகிறார்கள் என்பதில் ஆச்சரியமில்லை.




**சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்**

# ஆகாச கங்கை

## 29

மாயாவின் கேள்வியைச் சற்றும் எதிர்பாராத தாரக்ராம் ஒரு சில நிமிடங்கள் ஆடிப் போனார். 'யார் உங்களை இங்கே வரச் சொன்னது?' ஆனால் அந்தச் சில நிமிடங்களில் ஒரு புது உண்மையையும் புரிந்து, அறிந்து கொண்டார். முன்னொரு காலத்தில் மாயா இப்படிப் பேசியிருந்தால் அது அவளுடைய மனநிலையின் விளைவு என்று எண்ணியிருப்பார். இப்போது மாயாவின் முகத்தில் ஒரு மாற்றம். ஏன் அவள் கேட்ட விதமே அவருக்குப் புதுமையாக இருந்தது. இனி அவள் அவர் மீது வெறுப்பையே உமிழ்ந்தாலும் கவலைப்பட மாட்டார். ஆத்திரப்பட மாட்டார். அவருடைய பெண் முழுப் பிரக்ஞையுடன், செறிந்த அறிவுடன் பேசுகிறாள்!

நிலவிய அமைதியைக் கிழித்துக் கொண்டு அரவிந்தன், ''உங்களை இப்ப நான் எதிர்பார்க்கவில்லை, சார்... ஏழெட்டு நாட்களுக்கு அப்புறம் வரேன்னு நீங்களே சொல்லிட்டு, இன்னிக்கே வந்துட்டீங்க... பரவாயில்லே... உள்ளே வாங்கோ...'' என்றான்.

''அந்து!'' என்றாள் மாயா தாரக்ராமைப் பார்க்காமலே.

''என்னம்மா, மாயா?''

''நான் இவரோட பாம்பே போக மாட்டேன்... என்னை இவரோட அனுப்பிச்சுடாதே, அந்து!''

''இனிமே நீ எதுக்கும்மா பாம்பே போகணும்? நான் ஏம்மா உன்னை அனுப்பணும்? அவர் உன்னைப் பார்க்கத்தான் வந்திருக்கார்...''

''ப்ராமிஸ்?''

''ப்ராமிஸ்...''

மூவரும் உட்கார்ந்தபடியே பேசத் தொடங்கினர்.

''அப்ப சரி... அந்து... அந்த வசுமதி இன்னிக்கு என்னை என்ன செய்ஞ்சா தெரியுமா?''

''அவளைப் பத்திப் பேசாதே, மாயா...''

''கேளு, அந்து... நீ அந்தப் பக்கம் போனதும் இவ என்கிட்ட வந்தா. மொதல்லே ஏதோ ஒரு மாத்திரையைக் கொடுத்துத் தின்னுன்னு... நான் மாட்டேன்னேன்... எனக்கு



இன்னும் குணமே ஆகலே, என் பைத்தியம் தீரவே தீராதுன்னா. நான் பதில் பேசலே... அப்புறம் என்ன சொன்னா தெரியுமா?''

''எனக்கு இனிமே அவளைப் பத்தி எதுவுமே தெரிய வேண்டாம், மாயா... வேறே ஏதேனும் பேசு.''

''உனக்கு எல்லாம் தெரியணும், அந்து... நான் ஒழிஞ்சாத்தான் வழி பிறக்கும்னு... நீ கிடைக்கணுமானா நான் ஒழிஞ்சே ஆகணும்னு... அப்புறம் நான் கொஞ்சம் கண் அசந்த மாதிரிப் படுத்துண்டிருக்கறப்ப என் கழுத்தைப் பத்து விரலாலும் நெரிச்சா... இடீர்னு எனக்கு மலபார் ஹில்ஸ் ஹாங்கிங் கார்டன்ஸ் ஞாபகம் வந்தது... அன்னிக்கு நான் பயந்து அலறினேன்... அந்த அலறல் என் நெஞ்சிலேயே இத்தனை காலமா உறைஞ்சு போய் அப்பப்ப என்னைப் பயமுறுத்திட்டே இருந்தது... ஆனா, அவ என் கழுத்தை நெரிச்சப்ப உள்ளே அடைச்சுண்டிருந்த மூச்சுக் காத்து வெளியே போகலே... ஆனா என் நெஞ்சிலே அடைஞ்சுட்டிருந்த பயம் போயிடுத்து... அவ வயத்திலே காலாலே முட்டுக் கொடுத்து ஒரு தள்ளு தள்ளினேன். அவ பின்பக்கமா சாய்ஞ்சு விழுந்தா... அப்புறம், அப்புறம் நான் எழுந்து நின்னேன். அவளைப் பார்த்தேன். அவளாலே எதிர்ப்பார்வை பார்க்க முடியலே... அந்தச் சமயம் பார்த்து, நான் சொன்னேன்... என்ன சொன்னேன் தெரியுமா, அந்து?''

அரவிந்தனுக்குக் கோபமோ ஆத்திரமோ பிறக்கவில்லை. எந்தத் தடங்கலும் எந்தத் தயக்கமும் இல்லாமல் கோர்வையாக மாயா பேசும் பேச்சுத்தான் அவனை வியப்பில் ஆழ்த்திக்கொண்டிருந்தது. வசு ஒரு கொலை முயற்சியில் இறங்கியிருக்கிறாள், டாஜ் ஓட்டலில் தான் பயந்தது ஓரளவுக்கு உண்மையாகி விட்டது என்ற எண்ணங்கள் அவனுள் பிறந்தன.

மாயா தொடர்ந்தாள்.

''நான் சொன்னேன், 'நான் தயார், நீ என் கழுத்தை நெரிச்சு என்னைக் கொன்னுடுன்னு... ஆனா அவளாலே நகர முடியலே... முதல் முதலா அவ கண்லே பயத்தைப் பார்த்தேன்! எங்கே நான் அவளைக் கொன்னுடுவேனோன்னு அவ பயந்தா.... ரொம்ப நாள் முன்னாலே என்னை ஒருத்தன் ரேப் பண்ண ட்ரை பண்ணினானே, அவன் பயந்து ஓடற மாதிரிப் பட்டது... நீங்களும் சமயத்திலே வந்தீங்க... ஆனா அதுக்கு முன்னாலே நான் யாருக்கும் எதுக்கும் பயப்படாம கட்டில்லே படுத்துண்டு கண்ணை மூடிண்டேன்... நினைச்சுப் பார்த்தப்ப எல்லாமே வேடிக்கையா பட்டது, அந்து...''

''எல்லாத்தையும் மறந்துடு, மாயா...'' என்றான் அரவிந்தன்.

''உங்கிட்டேதான் சொல்லியாச்சே, இனிமே நான் இதையெல்லாம் ஏன் நினைவு வைச்சுக்கப் போறேன்'' என்ற மாயா தொடர்ந்து, ''அந்து, இன்னிக்கு எனக்கு ஒண்ணு புரிஞ்சுது'' என்றாள்.

''என்னம்மா அது!''

''வசுமதிக்குப் பைத்தியம் பிடிச்சுட்டுது... அவ இத்தனை வருஷமா உன்னையே நினைச்சு நினைச்சு ஏங்கிட்டிருந்தாளா, அந்த ஏக்கம் அவ மூளையைப் பாதிச்சுட்டுது... இல்லேன்னா ஒரு நல்ல படிப்புள்ள, பண்புள்ள பெண் இடீர்னு ராட்சசியா ஏன் மாறணும்... அதே சமயத்திலே என் மனசிலே இருந்த பயம், என் மூளையைப் பாதிச்ச பயம் என்னை விட்டு ஓடணும்?''

''இதை நீ ரொம்பத் தெளிவா சொல்றே, மாயா. எனக்கும் ரொம்ப சுலபமா புரிஞ்சுக்க முடியுது... மாயா இன்னிக்கு நாம இதை செலிப்ரேட் பண்ணலாம்!''

''எப்படி அந்து!''

''நான் கிச்சன் ஒர்க்கைப் பார்த்துக்கறேன். நீ ஹெல்ப் பண்ணு!''

''எப்படி அந்து?''

''கிச்சனுக்குள்ளே பூந்து அதையும் இதையும் எடுக்காம, என் கழுத்தைப் பிடிச்சுண்டு, 'அந்து', 'அந்து'ன்னு கொஞ்சாம இருக்கணும்! அதுதான் ஹெல்ப்!''

''இரு, இரு.... உன்னை அப்புறம் கவனிச்சுக்கறேன்!'' என்றாள் மாயா. பிறகு, ''அது சரி, ஏன் செலிப்ரேஷன்? எதுக்கு? வசு போயிட்டாளேன்னு, எனக்கு குணமாயிடுத்துன்னு?'' என்றாள்.



''உனக்கு என்னிக்கோ குணமாயிடுத்துன்னு எனக்குத் தெரியும் மாயா! சொல்லப் போனா உனக்கு எப்பவுமே எந்த மனவியாதியும் இருக்கலே!... இப்ப நாம் நம்ம வீட்டுக்கு முதல் முதலா வந்திருக்கிற ஒரு பெரிய விருந்தாளியை உபசரிக்கணும்!''

''ஓ. ஐ ஸீ... டாடிக்கா? ஓ. கே! ஆனா அவர் என் கேள்விக்கு இன்னும் பதில் சொல்லலே...''

''நீ அந்த மாதிரிக் கேள்வியே கேட்டிருக்கக் கூடாது, மாயா!''

மாயா பதில் சொல்லவில்லை. சிரித்தாள். பிறகு, ''அப்பா வந்ததும் நான் கொஞ்சம் நடிச்சேன்... அது என்னன்னு தெரியுமா, அந்து?'' என்றாள். அப்பாவைப் பார்த்துச் சிரித்தாள்.

''பதிலுக்கு நானும் நடிச்சேனே. அது உனக்குத் தெரியுமா?'' என்று அரவிந்தனும், தாரக்ராமைப் பார்த்துச் சிரித்தான்.

சோபாவில் உட்கார்ந்த தாரக்ராம் முதல் முறையாக வாய்விட்டுச் சிரித்தார்.

''அந்து, மாயா... நீங்க இப்ப நான் சொல்றதைக் கேட்பீங்களா?''

மாயா, ''அந்து, ஜாக்கிரதை! நைஸாப் பேசி, ரொம்ப ஹார்ட்டா இருக்கிறதிலே என் டாடியை மிஞ்சினவர் யாரும் கிடையாது.''

''தப்பு மாயா... உன் அப்பா பார்க்கத்தான் ஹார்ட்டா இருப்பார்... மனசு நுங்கு மாதிரி.''

''ஏன் மாமனார் தலையிலே ஐஸ் வைக்கறீங்க? ஆபீஸ்லே பிரமோஷன் வேணுமா... இல்லே வீட்லே ஏதானும் பரிசு வேணுமா?'' என்றாள் மாயா.

''அவரைப் பேசவிடு, மாயா.''

''நாம மூணு பேருமா இப்ப ஓட்டல் டாஜுக்குப் போவோம்... அங்கே பெரிய லஞ்ச்சா சாப்பிடுவோம்!'' என்றார் தாரக்ராம்.

''நோ டாடி... நோ... என்னோட அந்து வத்தல் குழம்பு பண்ணி நீங்க சாப்பிட்டதில்லே! ராஜம்மா கூட அசந்து போயிடுவா. அந்து நான் என்ன மெனுன்னு சொல்றேன்... அதை நீ செய்!''

''எனக்கு ஒரு சந்தேகம்.''

''என்ன அந்து!''

''நான் இவர் மாப்பிள்ளையா, உன் ஹஸ்பெண்டா... இல்லே... இல்லே...''

''யூ ஆர் மை ஹஸ்பெண்ட், கம் குக், அந்து... இன்னும் கொஞ்ச நாள்ளே, நான் எல்லாம் கத்துண்டப்புறம், நான் யுவர் ஒய்ஃப் கம் குக்!'' என்றாள் மாயா.

திடீரென்று மின்சார அழைப்பொலி கேட்டது.

அரவிந்தன் பார்த்தான்.

ஆராமுதன் தலையை மட்டும் நீட்டினார். பின்னால் ரங்கம் ஒளிந்து கொண்டிருந்தாள்.

''ஏன் நிக்கறீங்க, ஆராமுதன். உள்ளே வாங்க... வாங்கோ, மிஸஸ் ஆராமுதன்!'' என்றான் அரவிந்தன்.

''கார்த்தாலேதானே மாமி கொழுக்கட்டை கொண்டு தந்தாள். அதைத் திருப்பி வாங்கிண்டு போக வந்திருக்காளா?'' என்று சொல்லி மாயா சிரித்தாள்.

''என்ன ஆராமுதன், என்ன விஷயம்?'' என்று தாரக்ராம் கேட்டார்.

''நீங்க ஓட்டல் டாஜ்ல லஞ்ச் சாப்பிடலே.. அரவிந்தன் ஓட்டலே விட்டுப் போறப்ப,மணி ஒண்ணரை... யாரும் ஒண்ணும் சாப்பிடவேயில்லேன்னு ரங்கத்துக்கிட்டே சொன்னேன். அவளாலே தாங்கிக்க முடியலே... இப்ப மணி மூணு. மாயா இன்னும் சாப்பிடாம இருந்தா உடம்புக்கு ஆகாதுன்னு அவசர அவசரமா மோர்க் குழம்பும் ரசமும் வைச்சு அப்பளமும் பொரிச்சா... கூடவே அக்கார வடசலும் பண்ணினா!'' என்றார் ஆராமுதன்.

''என் வத்தல் குழம்புலேயும் இடி விழறது!'' என்றான் அரவிந்தன். பிறகு ''மிஸ்டர் ஆராமுதன், நீர் பிழைக்கத் தெரிஞ்சவர்!'' என்றான்.

''இவர்தானே, கான்பூர்ங்கற பேரைக் கேட்டாலே நடுங்கறார்னு சொன்னே அந்து?'' என்றாள் மாயா.

''உன் அப்பா இருக்கார்,மாயா! ஆபீஸைப் பத்திப் பேசப்படாது!'' என்றான் அரவிந்தன். பிறகு, ''வாங்கோ, எல்லாரும் சாப்பிடலாம்!'' என்றான்.

''ரங்கம் எல்லாத்தையும் டைனிங் டேபிள்ளே வை!'' என்றார் ஆராமுதன்.

''நானும் ஹெல்ப் பண்றேன்!'' —மாயா.

''வேண்டாம், குழந்தே... நீ ஒக்காரு... நான் பரிமார்றேன்!''

''நான் அந்த ஹெல்ப்பைத்தான் சொல்றேன் மாமி... சாப்பிடறதும் ஒரு ஹெல்ப் தானே!''

தாரக்ராம் தம் வாழ்விலேயே உணர்ந்தறியாத மகிழ்ச்சியில் திளைத்துப் போனார். எத்தனை வருடங்களாக, நாள் தவறாமல், வேளை தவறாமல் டாக்டர் கூறியபடி, மருந்தும் மாத்திரையும் கொடுத்து, என்று குணமாகும், எப்ப குணமாகும் என்று ஏங்கியிருக்கிறார்! ஆனால் இந்த அரவிந்தன் ஒரு ஏக்கமும் இல்லாமல், மாயாவின் மனத்துக்கு இசைந்து நடந்து, மெல்ல மெல்ல அவளுடைய மனத்துக்குள் புகுந்து அவளை ஒரு பெண்ணாக்கி விட்டான்!

உள்ளம் விகசிக்க அவர் அவர்களுடன் சாப்பிட உட்கார்ந்தார்.

*****

**அ**ன்று மாலை மாயாவும் அரவிந்தனும் பெசண்ட் நகர் கடற்கரை மணலில் உட்கார்ந்து வெண் நுரையை அள்ளி வரும் அலைகளைப் பார்த்த போது—

அலைகள் சிரித்தன.

திரும்பி வீட்டை நோக்கி நடக்கையில்—

மறையும் சூரியன் சிரித்தான்.

இரவு இருவரும் முதல் இரவைக் கொண்டாடுகையில்,—

நிலா சிரித்தான்.

மாயா எனும் பெண் முழுப் பெண்ணாகி விட்ட பெருமிதத்தில் மறுநாள் காலையில் கண் விழித்த போது—

காலைக் கதிரவன் சிரித்துக் கொண்டிருந்தான்.

(முற்றும்)

# சுகம், சுறுசுறுப்பு, சந்தோஷம்

**ஹெலனா**வின்
துணையுடன்
என்றும் நிரந்தரம்




மாதத்தில் வரும் சிரமமான
அந்த நாட்களில் முழுப்
பாதுகாப்புடன் உங்கள்
அன்றாட காரியங்களை
களிப்போடு செய்ய
உதவுவது ஹெலனா.

நூறு சதவிகித இயற்கையான
உயர்ரக பருத்தியினாலும்
விஸ்கோஸ் இழைகளை
அடிப்படையாக கொண்டும்
உருவாக்கப்பட்டதனால்
மலரைப் போன்ற
மென்மையானது.

தயாரிப்பாளர்கள்:
சர்காட் இண்டஸ்ட்ரீஸ் பி. லிட்.,
23, புரசைவாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை-600 007.
போன்: 661982 & 662004

ஹெலனாவின் அரவணைப்பு – சந்தோஷத்தின் துணையிருப்பு

FRAMEWORK

# இதோ
# உங்கள் நம்பகமான நண்பர்
# எல்.ஐ.ஸி முகவர்

உங்கள் நண்பர் உங்களுக்கு தொழில் முறை ஆலோசனை தந்து உதவுவார்—பயன் கருதாது—உங்கள் தனிப்பட்ட சுய தேவைகளையும் குடும்பத்தின் தேவைகளையும் நினைவில் கொண்டு—பல கவர்ச்சிகரமான ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் திட்டங்களிலிருந்து—மிகவும் உகந்த திட்டத்தை தேர்ந்தளிப்பார்.

குழந்தைகளின் கல்வி, திருமணம், தொழில் தொடக்கம், ஓய்வு பெற்ற பின்னுள்ள தேவைகள் போன்ற பொருளாதார வழி வகுத்தலில் உங்கள் நண்பரின் ஆலோசனை பல புதிய பாலிஸி எடுக்க விழைவோருக்கும் ஏற்கனவே பாலிசிதாரராய் உள்ளவர்களுக்கும் பயனளித்திருக்கிறது. சுருங்கக் கூறின், குடும்ப வருவாய்க்குள் குடும்பத்தின் மிக முக்கியமான தேவைகளுக்கு திட்டமிடுவதில் கை கொடுக்கிறது.



ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் மூலம் பொருளாதாரத் திட்டமிடுவதில் பயிற்சி பெற்ற நிபுணர் எல்.ஐ.ஸி. முகவர்.

முகவர்கள் பலர் தனிப்பட்ட முறையில் தேவையான புள்ளி விவரங்கள், தஸ்தாவேஜுகள் ஆகியவை கொண்ட அலுவலகங்களை நடத்துகிறார்கள்—உங்களுக்கு அருகிலிருந்து உடனடியே சேவை செய்வதற்கென்றே.

நாடு முழுதும் இரண்டரைக் கோடிக்கும் மேலான ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிசிகள் நடைமுறையில் இருக்கின்றன. லக்ஷக்கணக்கான குடும்பங்கள் எல்.ஐ.ஸி. முகவரை ''தேவைக்கால நண்பர்—உயர் சாதனை புரியும் நண்பர்''—என ஏற்கிறார்கள்.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**
**1985-86—எல்.ஐ.ஸி யின் முகவர் ஆண்டு.**

EP LIC/253-85 TAM

# மோகினித் திருக்கோலம்

## 41

### வர்மன் தீர்க்கதரிசி!

**வ**ர்மனை பற்றிய உண்மைகளை செஞ்சுகா கூறுவதைக் கண்டு அவன் பதைத்து, ''இளவரசி! இளவரசி! நிறுத்துங்கள்!'' என்றான்.

அந்த இளம் பெண் நிறுத்துவதாக இல்லை. நறுக்கென்று தெறித்த கண்ணீர் முத்து துளிகள் கடகடவென்று அவனைப்பற்றிய அத்தனை செய்திகளையும் ஒப்பித்தன.

கோபமுடன் வர்மன் அவளைப் பார்க்க, ''வீரரே! நமது சொந்தப் பாதுகாப்பை அளியாத அந்தத் திருப்பதிப் பணம் யாரிடம் போனால் என்ன? இனியும் அதைப் பற்றி மனச் சங்கடம் படவேண்டாம். பணம் சரியான இடத்திற்குப்போக வேண்டுமென்றால்பெருமாளே, அதைப் பார்த்துக் கொள்ளட்டும்'' என்று துடுக்காகப் பேசினாள்.

ஆச்சரியமாக இருந்தது வர்மனுக்கு. செஞ்சுகா விரக்தியில் அப்படிப் பேசுகிறாள்! வேங்கடப் பெருமாள் மீது ஏக நம்பிக்கை காத்தவளுக்கு ஏன் இந்த மாறுதல்?

மாறுதல் ஏன் இராது?

சொந்தத் தந்தை நினைவு இல்லாமல் படுக்கையில் கிடக்கும்போது, அவரைப் போய்ப் பார்க்க முடியாத நிலையில் பணயக் கைதியாக இங்கே இவள் இருக்கலாமா?

மராட்டியத் தலைவர் சங்கர் ராவ் இறங்கி நடந்து வந்தார்.

மராட்டியத் தலைமைப் படையிலிருந்து தம் இஷ்டப்படியே நடந்து கொண்ட பல மராட்டியப் பிரிவுகளில் ஒன்றின் தலைவர். ஆங்காங்கு சூறையாடி கொள்ளையிட்டு சுதந்திரமாகத் திரிகிறது அவர் குழு.

''சொல்லு! அந்தத் திருப்பதிப் பணம் எங்கே இருக்கிறது?'' அவர் குரல் கடுமையாகத் தொனித்தது.

வர்மன் ஒரு கணம் திகைத்தான். பிறகு ''அது பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தம்.'' என்றான்.

''அவர்களை நாங்கள் புதுச்சேரிக் கோட்டைக்குள் விரட்டியாகிவிட்டது. இனி இங்கே வரமாட்டார்கள்'' என்றார் தலைவர்.

''அது பணயப் பணம்'' என்றான் வர்மன்.

''பணயமே இங்கேதான் இருக்கிறது'' என்றார் தலைவர்.

ஒவ்வொன்றுக்கும் பதில் மொழி சடக்கென்று வந்தது. வர்மன் யோசித்தான்.

இந்த உடன்படிக்கைக் குழுக்காரர்கள் என்ன செய்கிறார்கள்? நிறைய பேர் வேடம் போட்டு வந்திருப்பதை அவனே பார்த்துவிட்டானே! ஒரு அவசரத்தில் அவர்களது உதவியையும் நாடலாம்-என்று சொன்னார்களே! இப்போது எங்கே இருக்கிறார்கள்?

''சொல்லு.''

''அவசியம் தெரிய வேண்டுமா?''

''ஆமாம். பணத்தைக் கொடு. பணயத்தை எடுத்துப் போ.''

''அப்படியானால் வாருங்கள்.''

சங்கரராவ் தலை அசைக்க ஒரு குழு அவனுடன் வெளியே புறப்பட்டது.

வர்மனுக்கு ஒரு குதிரை கொடுத்து மற்றவர்களும் குதிரை மேல் ஏறினார்கள்.

வர்மன் ஒரே சிந்தனையில் இருந்தான். இப்போது என்ன செய்வது?

வேண்டுமென்றே கோவிலை நோக்கிச் சென்றான். மாடவீதியை அடைந்ததும் அவனுக்கு அந்த இரு வரிசையிலும் நின்றிருந்த மோகினி நோன்பு வேடதாரிகள் புலப்பட்டார்கள். அவனால் நிச்சயம் அந்த பாளையக்கார வீரர்களை அடையாளம்கண்டுபிடிக்க முடிந்தது.

எல்லோரும் உடன்படிக்கை வீரர்கள். ஆங்காங்கே வரிசை கட்டி நின்றார்கள் அவர்கள். கண்களால் அவர்களை வெட்டிக் கொண்டு போனான் அவன். தீவர்த்தி ஒளிகளில் நூற்றுக்கணக்கான பேர்களை அவனால் பார்க்க முடிந்தது.

சன்னதி வீதியில்திரும்பினான். அவனுக்கு உற்சாகம் வந்துவிட்டது. நிறைய பேர் வந்திருக்கிறார்கள்.

''வீரவேல்!'' என்றான் ஆவேசத்துடன் திடீர் என்று.

அந்தத் தொனி அந்த வீதியையே நடுங்க வைத்தது.

''வெற்றி வேல்'' என்று மறு முழக்கம் கேட்டது.

வீச்சென்று குதிரை மேல் விழ வேண்டிய சாட்டையை, தன்னுடன் வரும் மராட்டியர் மீது சாடினான் அவன்.

குதிரை எகிறி வெகுண்டது.

பல மராட்டியர் கீழே உதிர்ந்தார்கள்.

பளீர் என்று தாவி மராட்டியரை விட்டு விலகி, ''வீர வேல்'', ''வீர வேல்'' என்று வர்மன் முழங்கினான்.

அத்தனை மோகினிகளும் கையில் வில்லும் வாளும் எடுத்தார்கள். குதிரைகள் சட சட என்று வந்தன. எக்காளம் பல பயங்கரமான சத்தத்தைக் கிண்டின.

ஒரு பெரிய அணை உடைந்த ஓசை!

**ஸ்ரீ வேணுகோபாலன்**

எங்கும் பிரளயமாக சப்தங்கள் பொங்கின. உடன்படிக்கைக் குழு வீரர்கள் அந்த புண்ணியத் தலத்தின் வீதிகளில் களம் புகுந்தார்கள்.

வீர வேல் கோஷங்கள்! 'விரட்டு, அடி, கொல்லு' என்று கர்ஜனைகள்.

வர்மன் இதரத் தளபதிகளோடு கலந்து கொண்டான்.

அடுத்த முகூர்த்தம் பூராவும் ஒரே திமிலோகப்பட்டது. கூச்சல்களும், முழக்கங்களும், ஆயுத வீச்சுக்களும் எங்கும் நிரம்பின.

இரண்டு முகூர்த்தம்வரை உடன்படிக்கைக் குழு பிரமாதமாகச் சண்டையிட்டது. "வேல்" முழக்கம் செய்து அழகாகப் போரிட்டார்கள்.

ஆனால் மராட்டியரின் தந்திரப் பயிற்சிகளின் முன் அவர்களது திறமைகள் கவிழலாயின.

மராட்டியர்கள் நேர் சண்டை போடவில்லை. ஆங்காங்கே தாக்கி விட்டு ஓடினார்கள். திடீர் திடீர் என்று புதுப் புது இடங்களில் தோன்றினார்கள். பாளையக்காரர்களைச் செதுக்கி விட்டு ஓடினார்கள்.

அந்த திடீர்த் தாக்குதல்களின் முன் பாளையக்காரர்கள் எதுவும் செய்ய முடியவில்லை. அவர்களது திறமை விழுந்துவிட்டது.

நடுநிசி ஆனபோது, தலையைத் தொங்கப் போட்ட வர்மன், குதிரை மீதேறிக் கடில நதிக்கரையோரம் ஓடினான்.

திருப்பதிப் பணத்தை எப்படியாவது காப்பாற்றி ஆக வேண்டும். முடியுமா?

நிச்சயம் இரவில் மராட்டியர் வருவார்கள். அல்லது காலையிலாவது வருவார்கள்.

தனது கோஷ்டியை அடைந்தான். எல்லோரும் அவசரமாக யோசித்தார்கள். கடிலத்தின் மறுகரைக்குப் போய்விடுவது என்று தீர்மானித்தார்கள்.

விடியும் ஜாமத்திற்கு முன் இடம் பெயர்ந்தார்கள். கடிலத்தைத் தாண்டி மறுகரைக்குப் போனார்கள்.

தூக்கம் கொள்ளாமல் அவர்கள் சர்ச்சை செய்தார்கள். சூடாக விவாதித்தார்கள்.

"தளபதி தோழர்களே!" என்று நிமிர்ந்து பேசினான் வர்மன். "திருப்பதிப் பணம் பிரெஞ்சுக்காரர்களுக்கும் அல்ல, மராட்டியருக்கும் அல்ல. இங்கிலீஷ்காரர்களுக்கு" என்றான்.

பலரும் திடுக்கிட்டு 'ஆ' என்றார்கள்.

"அந்த வெள்ளைக்காரனைவிட இந்த வெள்ளைக்காரன் தேவலை" என்று சொன்னான் வர்மன். வேன்ஸான் மூலம் கேட்ட இங்கிலீஷ் ஆட்சி முறையை எல்லாம் ஆச்சர்யமாக விளக்கினான்.

கேட்கக் கேட்க எல்லோரது வாய்களும் மூடின. கோபமாக எதிர்க்க நினைத்தவர்கள் தாமாக இறுக்கம் தளர்ந்தார்கள். எல்லோர் கண்களும் வியப்பிலும் திகைப்பிலும் பெரிதாகின.





அவன் நிறுத்தியதும் ஒருவரும் சிறு சப்தம்கூடச் செய்யவில்லை. "அண்ணன் தம்பிமார்களே! நம் குழு வீரர்களை எவ்வளவு வீரம் செறிந்தவர்களாக நினைத்தோம். நம் கண் முன்னால் எப்படி விழுந்து போனார்கள் அவர்கள். மராட்டியரின் குயுக்தி தாக்குதல்களை அவர்களால் தாங்கமுடியவில்லை. நம்மிடம் ஒத்துழைப்பு போதாது. பயிற்சி போதாது. ஒழுக்கம் போதாது. இந்த மராட்டியரை மட்டுமல்ல, நவாபு படைகளையும் 'புல்லு' போல் போரிட்டு ஜெயிக்கக் கூடியவர்கள் இங்கிலீஷ்காரர்கள்தான்! இவர்கள் வெற்றி பெற்று இவர்களது ஆட்சி முறையை நாம் பெறுவோமானால்...."

பக்கத்துத் தேவனாம்பட்டணத்திற்கு இங்கிலீஷ்காரர்களைத் தேடி ஒரு குழு உடனே ஓடியது.

அப்போது அங்கே லாரன்ஸ் இருந்தார். பொம்மராசுப்பாளையத்திலிருந்துதிருப்பதிப் பணம் வந்திருப்பதை ஆச்சரியமுடன் கேட்டார். நடந்த சம்பவங்கள் அனைத்தையும் தெரிந்து கொண்டார்.

அந்த இங்கிலீஷ்காரர் முன் பல்லக்குகள் வரிசையாக நிறுத்தப்பட்டன. அவற்றின் அடிபாகங்கள் திறக்கப்பட்டன. ஆயிரக் கணக்கில் நாணயங்களும், தங்க, வைர, வெள்ளிகளும் உதிர்வதைக் கண்டு லாரென்ஸ் கண்கள் ஆகாயமளவுக்கு விரிந்தன.

"ஆகா! திருப்பதிப் பெருமாள்! அவர் உங்கள்கடவுள்மட்டுமல்ல!எங்கள்கடவுளும் கூட!" என்று கையை மேலே தூக்கிக் குதித்தார்.

வர்மனை அப்படியேதழுவி முத்தமிட்டார்.

காலை இரண்டாம் நாழிகையில் கடிலக் கரையில் வர்மனும் இதரர்களும் மீண்டும் கூடிநின்றார்கள். பல்லக்குகளும் நின்றன. பணம் எடுக்கப்பட்ட வெறும் பல்லக்குகள்.

எதிர்க்கரையில் மராட்டிய படை, சித்த நிலையில் இருக்க, வர்மன் வெள்ளைக் கொடி காட்டினான்.

இரு தரப்பாரும் நடுவில் உள்ள மணல் மேட்டில் சந்தித்து ஒப்பந்தம் பேசினார்கள்.

செஞ்சுகாவைத் தரவேண்டும். பணத்துடன் பல்லக்குகள் ஒப்படைக்கப்படும்.

தீர்மானம் இசைவாயிற்று. இங்கிலீஷ்காரர் சொன்ன யுக்தியின் பேரில் சில மூட்

டைகளில் நாணயங்களை கட்டி, மீதி அனைத்திலும் கற்கள் கட்டப்பட்டிருந்தன.

பல்லக்குகள் மறுகரை போயின.

செஞ்சுகா, அவளது உடமை, பரிவாரம் தாங்கிய பல்லக்குகள் இக்கரைக்கு வந்தன.

வர்மனுக்கு உணர்ச்சி தாளவில்லை. எதிர் கரையில் மராட்டியர் ஏமாற்றம் அடைந்து, போர் தொடுக்க வருமுன் எல்லோரும் தேவனாம்பட்டணம் கோட்டைக்குள் போய் விட நினைத்தார்கள்.

செஞ்சுகாவின் கோஷ்டியோடு அவசர அவசரமாகத்தேவனாம்பட்டணத்தை அடைந்தார்கள்.

கோட்டை வீதியில் பல்லக்குகள் நிற்க, அவற்றில் எந்தச் சலனமும் இல்லாதது கண்டு "தேவி" என்றான், ராஜ பல்லக்கின் திரை நோக்கி. பதில் இல்லை.

"தேவி! வர்மன் வந்திருக்கிறேன்." என்றான். பதில் இல்லை.

பிறகு திரையை, சந்தேகத்தோடு விலக்க, செஞ்சுகா அங்கே உட்கார்ந்திருந்தாள். அவனை வெறிக்கப் பார்த்திருந்தாள். அது என்ன அப்படிப் பார்வை என்று நினைக்கும் போது சுளீர் என்று அடிவயிற்றில் அந்த உணர்வு குத்தியது.

திடுக்கிட்டு, 'செஞ்சுகா!' என்று அலற அந்த இளம் பெண்ணின் நெஞ்சின் மீது பாய்ச்சியிருந்த கத்தி அவன் கண்ணில் கொடுமையோடு விழுந்தது.

வர்மனால்நிற்கமுடியவில்லை. கீழேசாய்ந்து விட்டான்.

மற்ற பல்லக்குகளில் செஞ்சுகாவின் தாதிகள் கொல்லப்பட்டுக் கிடந்தார்கள்.

* * * * *

துக்கத்திலிருந்து எழ வர்மனுக்கு இரண்டு நாட்கள் ஆயின.

சிந்து அவனை வெகுவாகச் சமாதானப் படுத்தினாள்.

லாரன்சும் இதமான மொழிகளைக் கூறினார்.

இந்திய சரித்திரத்திலேயே வர்மன் ஒரு மகத்தான தீர்மானத்தைச் செய்தான் என்று அவர் கூறினார்.

மூன்றாம் நாள், ஒரு இங்கிலீஷ் சிறு படையோடு திருப்பதிப் பணம் ஆர்க்காட்டிற்குப் புறப்பட்டது.

வர்மனும், சிந்துவும் இதரர்களும் அதனோடு சென்றார்கள். அந்த இங்கிலீஷ் படை சின்னதுதான். ஆனால் பலம் வாய்ந்தது என்பது அவர்களுக்குத் தெரியும்.

ஆர்க்காட்டில் ராபர்ட் கிளைவ் ஐம்பத்தோராம் நாள் முற்றுகையில் இருந்தார். அவரது சகாக்கள் பலர் பட்டினியால் நோய் கண்டு இறந்துவிட்டார்கள். இருந்தும் தனது பலவீனத்தை வெளியில் காட்டாமல் கிளைவ் பல்லைக் கடித்து சும்மா இருந்தார்.

இன்னும் ஒருவாரம்தான். அதற்குள் உதவி வரவில்லையென்றால் அவர் படை சரணாகதி தான்.

அவர் விரும்பாவிட்டாலும் தளபதிகள் சென்றுவிடுவார்கள்.

அன்று இரவு அரைத் தூக்கத்திலிருந்து கிளைவ் எழுப்பப்பட்டான்.

ஏராள திருப்பதிப் பணத்தோடு, உதவி வந்திருப்பதாகத் தகவல் சொன்னார்கள். லஞ்ச உதவி மூலம் பொருள்களும், ஆட்களும் கோட்டைக்குள் வந்துவிட்டார்கள்.

கிளைவ் போய்ப்பார்த்தான். இரண்டு லட்சம் ரூபாய் நாணயங்கள், குலுங்கிக் கிடந்தன. மற்றும் ஏராள நகை, அணிமணி, எல்லாம் குவிந்து கிடந்தன. எல்லாம் திருப்பதிப் பெருமானுக்கு வந்த காணிக்கைகள்.

துள்ளிக் குதித்தான் கிளைவ். வர்மனைத் தழுவித் தழுவி முத்தமிட்டான்.

"இதோ பார். நீ ஒரு இந்தியன். நான் வியாபாரம் செய்ய இங்கே வந்தவன். நிச்சயம் லாபம்தான் என் நோக்கம். ஆனால் உங்கள் நாட்டில் மக்கள் படும் பாட்டைக் கண்டு மனம் நொந்துவிட்டேன். அரசாங்கமே இங்கே இல்லை. தடி எடுத்தவன் எல்லாரும் ராஜாக்கள். அநியாயம். அநியாயம். இதற்கு உங்கள் கடவுளே கண் திறந்திருக்கிறார். தமது பொருளை எங்களுக்கு அனுப்பியிருக்கிறார். நாங்கள் அதை சிரம் தாழ்த்தி ஏற்போம். எங்கள் நன்மைக்கு மட்டுமல்ல, உங்கள் நன்மைக்காகவும் அதைப் பயன் படுத்துவோம்" என்றான்.

மறுநாள் காலையில் மராட்டியத் தலைமைப் படை தளபதி முராரிராவுக்கு கடிதம் எழுதினான். தனக்கு உதவி வேண்டும். அதைச் செய்தால் முராரிராவுக்கு ஏராளப் பணம் கொடுக்கப்படும்.

முராரிராவ் உண்மையான மராட்டிய





ஒரு பணக்கார மாது 50,000 டாலர் பணத்தைக் கொடுத்து பிகாஸோ ஓவியத்தை விலைக்கு வாங்கிய பின் பிகாஸோவிடம் கேட்டார்:

"ஓவியம் எதை வெளிப்படுத்துகிறது?"

பிகாஸோவின் பதில்:

"ஐம்பதினாயிரம் டாலர்களை!"

— காயத்ரி.

தலைமைப் படையின் தளபதி. பிரிந்து போன உதிரிப் படைகளைச் சேர்ந்தவர் அல்ல. பிரிந்து போனவர்கள்தான் கொலை, கொள்ளைகளில் ஈடுபட்டிருந்தார்கள்.

53 ஆம் நாள் முராரியிடமிருந்து செய்தி வந்தது. 'உதவத் தயார்' சீக்கிரம் புறப்பட்டு வருகிறேன்.'

இந்தச் செய்திகள் உளவு மூலம் ராஜா சாகிப்புக்குக் கிடைத்தது.

மராட்டிப் படை தன் படையைச் சூழ்ந்து கொண்டால்....

நிச்சயம் அந்தப் படைகளை அவரால் எதிர்க்க முடியாது.

அதற்குத் தேவையான பலம் போதாது.

ராஜாசாகிப் குழம்பும்போது, திடீரென்று ஆர்க்காட்டுக் கோட்டை வாயில் திறந்தது.

ராபர்ட் கிளைவ் தனது படைகளோடு வீர முழக்கம் செய்து வெளியே வந்துவிட்டார்.

ராஜாசாகிப் இதை நிச்சயம் எதிர்பார்க்க வில்லை. ஆயிரக் கணக்கில் படைகள்தான். ஆனால் தயார் நிலையில் இல்லாமல் இருக்கிறார்களே!

கிளைவும் அவரது ஆட்களும் தீவிரமாகச் சண்டையிட்டார்கள்.

விடுதலை அடையும் வெறி அவர்களிடம் வெகுவாக ஓங்கிவிட்டது.

ஆக்ரோஷத்தோடு போரிட்டு, எதிரியின் பெரும் சைன்னியத்தில் ஒரு பிளவு உண்டாக்கினார்கள்.

கிளைவின் அனைத்து சாமர்த்தியங்களும் சாகசங்களும் அந்தப் படையின் முன்னணியோடு ஓடியது.

இருபக்கமும் நவாப் வீரர்கள் துவண்டு வீழ்ந்தார்கள்.

ஒரு ஒருமித்த எதிர்ப்பை உடைக்க முடியவில்லை.

வெளி விளிம்புகளுக்கு கிளைவ் வந்த போது 'மராட்டி, மராட்டி' என்று பீதிக் குரல்திடீர் என்று கேட்க, ராஜாசாகிப்பின் பெரும் படை அத்தனையும் கலைந்து ஓட ஆரம்பித்தது.

கிளைவ் இதை எதிர்பார்க்கவில்லை. முழு விடுதலைக்கு இன்னும் சிறிது நேரம் போரிட வேண்டியிருக்கும் என்று நினைத்தான். ஆனால் அதற்குள் வெற்றி அவனது காலடியில் வந்து வீழ்ந்துவிட்டது. திருப்பதிப் பணத்தின் மகிமை என்று நினைத்தான். அந்தப் பணத்தினால்தான் உள்ளே மூன்றுநாட்கள் அவனும் அவன் படைகளும் வயிறாரச் சாப்பிட்டார்கள். ஆயுதங்களை திட்டிக் கொண்டார்கள். லஞ்சம் கொடுத்து வேண்டிய ஆயுதங்களையும் தருவித்துக் கொண்டார்கள்.

54 நாட்கள் ஆர்காட்டு முற்றுகைக்குள் கிடந்து பிறகு வெளி வந்த ராபர்ட் கிளைவின் சாகசம் இந்திய சரித்திரத்துள் சென்றது.

கோட்டைக்குள் திண்டாடித் தத்தளித்துக் கொண்டிருக்கும் நிலையில் திருப்பதிப் பெருமானின் பணம் வசதியாகக் கையில் கிடைத்தது பெரும் பாக்கியம்.

அது இல்லாவிட்டால், கோட்டைக்கு வெளியே இப்படி எளிதாகத் தப்பித்துப் போயிருக்க முடியாது.

ராஜாசாகிப்பின் முற்றுகையும், அதைத் தகர்த்துவிட்ட ராபர்ட் கிளைவின் வீரமும் எங்கும் பேசப்பட்டன.

அதன் பிறகு தொடர்ந்து பிரெஞ்சுக் காரர்களோடு நடந்த சண்டையில் கிளைவ் வரிசையாக வெற்றி பெற்றான்.

சீக்கிரம் திருச்சிராப்பள்ளிக் கோட்டையும் விடுவிக்கப்பட்டு, முகம்மதலி வெளியே வந்தார்.

அவரை எதிர்த்த சந்தா சாகிப் ஒரு இரைப் பிராணி போல் துரத்தப்பட்டு ஓடினார்.

சிறிது காலத்தில் அவர் (சந்தா சாகிப்) எதிரிகளிடம் அகப்பட்டுக் கொலை செய்யப் பட்டார்.

இந்தச் சம்பவத்திற்கு முன் நிகழ்ந்த பல சண்டைகளில் கிளைவ் வெற்றி பெற்றான். பிரெஞ்சுக்காரர்கள் தோல்வி அடைந்தார்கள்.

இந்திய மண்ணில் ராஜ்யம் அமைக்க வேண்டும் என்று எண்ணிய பிரெஞ்சுக் காரரின் ஆசை வலுவில் போய் இங்கிலீஷ் காரர் மடியில் விழுந்தது.

இங்கிலீஷ்காரர்களுடன் திருச்சி, ஸ்ரீரங்கம் முதலிய இடங்களில் நடந்த யுத்தங்களில் வர்மன் பங்கு கொண்டான்.

ஸ்ரீரங்கத்து வெற்றிக்குப் பிறகு, 'இனி எப்போதுமே இங்கிலீஷ்காரர்களுக்கு வெற்றி' என்று வர்மனுக்குத் தெரிந்துவிட்டது.

அவன் மனத்தின் ஒரு கள் விருப்பம் அதன் மூலம் நடைபெறுகிறது என்று எண்ணினான்.

தனது சொந்த ஊரையும் தாயாரையும் அடைய விரும்பினான்.

கிளைவிடம் விடை பெற்றான்.

அதுவரை, அவனுடன் ஒட்டி வந்த சிந்து "நானும் வருகிறேன். இனி வேறு வாழ்க்கை எனக்கு ஏது?" என்றாள்.

பாளையச் சீமைக்கு அந்த நாயக்க வழி சத்துப் பெண்ணை அழைத்துப் போவது யோசனையாக இருந்தது. தாயார் என்ன சொல்வாளோ!

"நான் உனக்கு ஆசீர்வாதம் செய்கிறேன். அவளை உன் மனைவியாக அழைத்துச் செல்' என்றார் வேன்ஸான்.

"தாங்களா? எந்த முறையில்?" என்றான் வர்மன்.

"ஏன்? தந்தை முறையில்!" என்றார் வேன்ஸான்.

வர்மன் வாயைப் பொத்திக் காட்டினான்.

வேன்ஸான் ஓடி வந்து வர்மனைத் தழுவினார். "வர்மா! நீ என் மகன்!" என்றார் தழு தழுத்து.

அவர் கண்களில் நீர் பெருகி வந்தது. வர்மன் திடுக்கிட்டான். வேன்ஸான் என்ற அந்தப் பாளையக்காரத் தேவர் தமது வாழ்க்கையில் புதுச்சேரியில் நடந்த அநியாயத்தையும், அதன் பிறகு தப்பி அவர் கப்பலில் ஏறி மேல்நாடு போனதையும் பணம் சம்பாதித்ததையும், பெரிய வர்த்தகராகத் திரும்பி வந்ததையும் விவரமாகக் கூற வர்மனின் கண்கள் இளகி நீர் சொரிந்தன.

"அப்பா! வா, ஊருக்கு" என்றான் தாபத்துடன்.

"வேண்டாம் வர்மா. உன் தாய் வீர குலத்தைச் சேர்ந்தவள். நான் மறுமணம் செய்து மாறி வந்திருப்பதை அவள் ஏற்றுக் கொள்ள மாட்டாள். சொல்லு அவளிடம், நான் காணாமலே போய்விட்டேன் என்று. அது அவளுக்கு ஒரு இதமான வலியையா வது தரும்."

அவர் கண்கள் உருகி வழிந்தன.

சிந்துவை ஏற்றுக் கொள்ளத் தந்தையின் ஆசி கிடைத்ததும், அவளை தனது சீமைக்கு அழைத்துப் போக வர்மன் சம்மதித்தான்.

வேன்ஸான் அவர்கள் புறப்படுவதைப் பார்க்கக் காத்திருக்கவில்லை. அது அவர் மனத்தில் பெரும் துயரை ஏற்படுத்தும் என்று நினைத்து குதிரை மீதேறி ஒரு சோகமான பிரெஞ்சுப் பாடலைப் பாடியவாறு பறந்து போனார்.

குதிரைகளில் வர்மனும், சிந்துவும் ஏறிப் போவதற்கு விடை கொடுத்தவர் ராபர்ட் கிளைவ்தான். தனது வரிசையான போர் ஆயத்தங்களுக்கிடையே, ஒரு நன் நினைப்புக் காரனை நிச்சயம் வழி அனுப்ப வேண்டும் என்று நினைத்து ஊர் வெளி வரை வந்து வழி அனுப்பினார்.

ஆனால் இங்கிலீஷ்காரரால் இந்த பூமிக்கு வரும் என்று வர்மன் கனவு கண்ட ஆட்சி முறை சிறுகச் சிறுக வந்து சேருவதற்கு 200 ஆண்டுகள் ஆயின.

இங்கிலீஷ்காரர்தான் அந்த ஆட்சி முறையை இந்நாட்டுக்கு அளிக்க முடியும் என்று நினைத்த வர்மன் நிச்சயம் ஒரு தீர்க்க தரிசியாகத்தான் இருந்தான்.

(முற்றும்)

# ஸ்பாட் லைட்

இத்தனை பெரிய கூட்டத்தைப் பார்த்த பிறகும் எந்தக் கொம்பனாவது பிரதமர் ராஜீவ் காந்தியின் தலைமையைக் குறை கூறினால் அவன் தமிழகத்தில் நடமாட முடியாது என்பதைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

— கடற்கரைக் கூட்டத்தில் தங்கபாலு எம்.பி.

சட்டசபையில் மைக் ஏதாவது உடைந்தால், அதை ரகுமான்கான்தான் உடைத்தார் என்ற பொதுவான கருத்து நிலவி வருகிறது.

— ரகுமான்கான்.


ரகுமான்கான்

தேர்தலின்போது பஸ் விடுவோம் என்று வாக்குறுதி கொடுத்தார்கள். இன்று அதையே வேப்பந்தட்டை மக்கள் கேட்ட போது துப்பாக்கியால் சுடப்படுகிறார்கள்.

— நெடுமாறன்.

வாரத்திற்கு ஒருமுறை போலீஸார் துப்பாக்கிச் சூட்டை நடத்தித்தான் தீர வேண்டும் என்று யாரும் கேட்பதில்லை. முடிந்த அளவு தவிர்க்கவே முயற்சிக்கிறார்கள்.

— நாவலர் நெடுஞ்செழியன்.

ஒரு ரகசியத்தைச் சொல்கிறேன். தி.மு.க.வின் இரண்டாவது தளபதி ஒருவர் முதல்வர் எம்.ஜி. ஆருடன் அரை மணி நேரம் போனில் உரையாடினார். எம்.ஜி. ஆர். என்ன சொன்னார் தெரியுமா? நீங்கள் அங்கிருந்தாலாவது கருணாநிதியை தட்டிக் கேட்கலாம். இங்கு வந்துவிட்டால் யார் கருணாநிதியை அடக்குவது? அதனால் நீங்கள் அங்கேயே இருங்கள் என்றார் முதல்வர்.

— அமைச்சர் ஆர்.எம். வீரப்பன்.

புகைப்படம்: சுபா

# தண்டனை

கோர்ட்டும், சட்ட நுணுக்கங்களால் குற்றவாளி தப்பிப்பதும், நிரபராதி நியாயம் தேடி தானே கத்தியைக் கையில் தூக்குவதும் பார்த்துப் பார்த்து நாம் அலுத்துப் போன விஷயம். டைரக்டர் இராம நாராயணனுக்கு இன்னும் அலுக்கவில்லை. எனவே ரசிகர்களுக்கான 'தண்டனை'.

எஸ்.பி.க்கு ஒரு பார்ட்டி ஏற்பாடு செய்து, அதில் ஸ்ரீகாந்த் குடித்துவிட்டு கலாட்டா செய்ய, எஸ். பி.யே அவரை ரூமுக்குள் தள்ளி தாழ்ப்பாள் போடுகிறார். உள்ளே போன ஸ்ரீகாந்த் 'கதவைத் திற, கதவைத் திற' என்று ஏற்கனவே டேப் செய்த கதறலை ஓடவிட்டுவிட்டு வெளியேறி கற்பழித்து கொலையும் செய்து திரும்பி வந்து சாதுவாய் எஸ். பி. கதவைத் திறந்தவுடன் வெளியே வருவது ருசிகரமான ஐடியா.

விஜய்காந்த்தை காப்பாற்றுவதற்காக அவர் தன் பெட்ரூமில் இருந்ததாக சாட்சி சொல்லும் ஜெயசித்ரா, மாமனார் சந்தேகப்படுகிறார் என்று தெரிந்ததும், ''போலீஸ்காரனுக்குச் சந்தேகம் வரலாம், விசாரணை செய்யலாம். அவர் என்னோடு பெட்ரூமில் இருந்தார் என்றுதானே சொன்னேன், படுக்கையிலிருந்தார் என்றா சொன்னேன்? என் மாமனாருக்கு சந்தேகம் வந்ததைத்தான் என்னால் தாங்க முடியவில்லை'' என்று குமுறும் இடம் நல்ல உருக்கம்.

மற்றபடி —

டிக்கெட் கிழிக்கும் இடத்திலேயே மூளையையும் கழற்றி வைத்துவிட்டுப் போனால் ரசிக்க முடியுமோ என்னவோ!

— ஜெயமன்மதன்



''ஊஞ்சே லாக்'' என்னும் படத்தின் கிளைமாக்ஸ் காட்சி ஊட்டியில் படமாக்கப்பட்டது. இதற்காகப் பம்பாயில் இருந்து ஒரு கறுப்புக் குதிரை வரவழைக்கப்பட்டது. இரண்டு நாள் படப்பிடிப்புக்குப் பிறகு அக்குதிரைக்குக் காயம் ஏற்பட்டதால் படப்பிடிப்பில் கலந்து கொள்ள முடியவில்லை. அதே போன்ற தோற்றமுடைய வேறொரு குதிரை கிடைக்கவில்லை. ஒரு வெள்ளைக் குதிரைதான் கிடைத்தது. அதற்கு தினமும் 160 டின் கறுப்பு ஷூ பாலிஷ் தடவி கறுப்புக் குதிரையாக்கி படப்பிடிப்பைத் தொடர்ந்தனர்! ஐந்து நாட்களுக்குப் பிறகு ஊட்டியில் ஷூ பாலிஷ் கிடைக்காததால் பெங்களூரிலிருந்து வரவழைத்தனராம்!

— சீதாபஞ்சு.





# அடுத்தாத்து ஆல்பர்ட்

காதலென்று வந்தபோது, மதமாவது, ஜாதியாவது என்ற அதே பழைய சினிமா சித்தாந்தம். அய்யங்கார் குடும்பமும், கிறிஸ்துவக் குடும்பமும் அடுத்தடுத்த வீடுகள். இவர்கள் வீட்டில் ஒரு யுவன், யுவதி. அவர்கள் வீட்டில் ஒரு யுவதி, யுவன். காதலோ காதல்கள்!

'எங்கள் வீட்டிற்குள் உங்கள் கோழிகள் பறந்து வந்தன' என்று ஆரம்பித்து ஊர்வசியும், பிரபுவும் வேலியோரமாய் நின்று காரசாரமாய்ச் சண்டை போட்டுக் கொண்டே கடிதங்களை நைஸாய்ப் பரிமாறிக் கொள்வது சுவாரஸ்யம். அப்புறம் அதில் மேலும் ஒரு ரசமான திருப்பம். அடிமனசில் ஆசையை வைத்துக் கொண்டு இருவரும் விட்டுக் கொடுக்காமல் பழகும் காட்சிகளில் ஊர்வசி பிரகாசிக்கிறார். பிரபுவுக்கு சிவாஜி ஜாடை அடிக்கிறது. (நடிப்பில் இம்ப்ரூவ்மெண்ட் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளவும்). காதலர்களை சேர்த்து வைக்க நாடகம் போடுகிறேன் பேர்வழி என்று அவர்களைத் தற்கொலை செய்து கொண்ட மாதிரி நடிக்கச் சொல்ல, மறுநாள் நிஜமாகவே அவர்கள் இறந்து போயிருப்பது கண்டு, பிரபு அதிர்ச்சியடைவது நல்ல திருப்பம்தான். ஆனால் பின்னணியில் ஒரு பாட்டைப் போட்டு திரையிலிருக்கும் ஆறேழு பேரும் அடித்துக் கொண்டு ஒப்பாரி வைக்க, கர்ம சிரத்தையாய் கடைசிச் சடங்குகளை அவ்வளவு நேரத்திற்குக் காட்டியிருக்க வேண்டுமா? அனுதாபத்தைவிட அலுப்புதான் அதிகம் ஏற்படுகிறது.

இடைவேளைக்கப்புறம் ஆவிகள் வந்து கதையை நகர்த்துகின்றன. அய்யங்கார் ஊர்வசி கவுன் மாட்டிக் கொள்வதும், பிரபு 'ஆல்பர்ட்' பூணூலை தரித்துக் கொள்வதும் சரி என்றே கஷ்டப்பட்டு ஏற்றுக் கொள்வதானாலும் மறுபடி மறுபடி இதே ரீதியில் காட்சிகளை அமைத்திருப்பது ஏன் டைரக்டர் சார்? இருக்கையில் நெளிந்து கொண்டேயிருக்கிறோம்.

கிறிஸ்டியன் வீட்டுப் பாலை வாங்கி காப்பி கொடுப்பதா என்று மேஜர் எகிற, 'ரெண்டு வீட்டுலயும் ஒரே கடைல காப்பிப் பொடி வாங்கறோம், ரெண்டு வீட்டுக்கும் ஒரே மாட்டுப் பால், ஒரே கடை சர்க்கரை' என்று ஊர்வசி பதில் கொடுப்பதும், பின்னால் நிறைய இடங்களில் ஜாதிப் பிரச்னை பற்றி வாதப் பிரதிவாதம் செய்திருப்பதையும் பார்த்தால் டைரக்டருக்கு வரிவிலக்கு ஆசை இருக்கிறதோ என்று தோன்றுகிறது.

ஒன்று மட்டும் நிச்சயம். ஜாதி மத வேறுபாடுகள் ஒழியாத வரையில் அவற்றை வைத்துப் படம் பண்ணுவதும் குறையப் போவதில்லை — ஒப்புக் கொள்கிறோம்.

பரிதாபம் என்னவென்றால் நிறையக் காட்சிகள் டி.வியில் பழைய சினிமா பார்க்கிற பிரமையை உண்டு பண்ணுவதுதான்!

— ஜெயமன்மதன்



அநுபவம் என்பது சீப்பைப் போன்றது.
அது நமக்கு வழுக்கை விழுந்த பின்பே கிடைக்கிறது!
— எமர்சன்.

— காயத்ரீ.



பருவத்தின் எல்லையில் என் பாசத்துக்குரிய மகள், சங்கடமான இந்தக் காலகட்டத்தில் அந்த இளம் உள்ளம் படும் வேதனை, தாயாகிய எனக்குத் தான் புரியும்.

## “என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித் தர நான் முடிவு செய்தது ஏனென்றால்”..

ஒரு சிறுமியின் வாழ்க்கையில் அவள் வயதுக்கு வரும் காலகட்டம் தவிர்க்க முடியாத ஒன்றாகும். பயமும், வெட்கமும், தவிப்பும் நிறைந்து, உடலளவில் மட்டுமின்றி மனத்தளவிலும் அவள் பாதிக்கப் படும் நேரமும் அதுதான்.

நான் ஒரு தாய். இந்தக் காலகட்டத்தை அனுபவித்தவள். அதன் சிரமங்களை நன்கு உணர்ந்தவள். குறிப்பிட்ட அந்த ஐந்து நாட்களும் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஏற்படும் சங்கடமும் தொல்லையும் எனக்கு நன்றாகவே தெரியும்.

**இத்தனை வருடங்களாக, சானிடரி பாதுகாப்புக்குத் தேவையானதை நான் வீட்டிலேயேதான் தயாரித்துக் கொள்வேன். அது மிகவும் தர்மசங்கடமான வேலைதான்!**

மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதற்காக நன்றாகத் துவைத்து, காயப்போட்டு.. போதும் போதும் என்றாகி விடும். அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்குக் கூட நமது 5 நாள் பிரச்னை விளம்பரப்படுத்தப்பட்டு விடும். இத்தனை அவஸ்தைப் பட்டாலும்,

நமக்குத் தேவையான சானிடரி பாதுகாப்பு கிடைக்குமா என்பதும் நிச்சயமில்லை. அது மட்டுமல்ல; எப்போது எந்த அசம்பாவிதம் நடந்து அவமானப்பட வேண்டி வருமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டே இருக்க வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில் இதிலெல்லாம் ஓரளவு பழக்கப்பட்டுவிட்டேன் என்றே சொல்லலாம். தவிர, அந்தக் காலத்தில் சங்கடமான அந்த 5 நாட்களில் பெண்கள் வெளியே போவது என்கிற வழக்கமெல்லாம் அறவே கிடையாது.

---

**ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது... பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில்கூட துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.**

---

ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது. இப்போது கேர்ஃப்ரீ போன்ற நவீன சானிடரி பாதுகாப்பு கிடைக்கும் இந்த நாளில், என் மகளும் நான் இளம் பெண்ணாக இருந்ததைப் போலவே ஏன் வீட்டிற்குள் அடைபட்டுக் கிடக்கவேண்டும். நான் வளர்ந்த காலம் வேறு. என் மகள் வளரும் சூழ்நிலை வேறு இன்றைய சிறுமிகள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட துடிதுடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.

என் மகளைப் பாருங்களேன். அவள், நான் இளம் பெண்ணாக இருந்த காலத்தில் செயல்பட்டதைவிட மிக...மிக சுறுசுறுப்புடன் செயல்பட வேண்டியிருக்கிறது...படிப்பு விஷயத்திலும் சரி, இதர வேலைகளிலும் சரி. நாங்கள் இருந்ததைப் போல என் மகளையும் வீட்டிற்குள் முடக்கிப்போட நான் விரும்பவில்லை.

அதனால்தான் நான் கேர்ஃப்ரீயைத் தேர்ந்தெடுத்தேன். என் மகளின் துடிப்புக்கும் துள்ளலுக்கும், ஆட்டத்துக்கும் ஓட்டத்துக்கும் ஈடு கொடுக்கும் இணைபிரியாத் தோழி கேர்ஃப்ரீ.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். துணியையும் பஞ்சையும் வைத்து மடித்து, நேரத்தை வீணாக்கும் தொல்லை கிடையாது.

நான் அந்தக் காலத்தில் செய்தது போல என் மகள் துவைத்து, காயப் போட்டு, சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையான நேரத்திலே சட்டென்று புத்தம் புதுசாக, சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம்.

ஒரு விஷயத்தை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். முதலில் எனக்கு இத்தகைய ரெடிமேட் நாப்கின்மீது கொஞ்சம் அவநம்பிக்கை இருக்கவே செய்தது. ஆனால், இப்போது என் மகள் மாசாமாசம் கேர்ஃப்ரீ பயன்படுத்தி மகிழ்ச்சியோடு இருப்பதைப் பார்த்ததும் எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தேவையான சானிடரி பாதுகாப்புக்கும், அசம்பாவிதம் எதுவும் நடக்காமல் தடுக்கவும் சானிடரி நாப்கின் பெரிதாக, கனமாக இருக்க வேண்டும் என்று நான் எண்ணி வந்தது தவறு என்பது இப்போது விளங்குகிறது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் சுகமாகவும் பாதுகாப்பாகவும் உணர்வதாக என் மகளே சொல்கிறாள். பயமின்றி, கவலையின்றி வெளியே சுற்றவும் முடிகிறது என்றும் கூறுகிறாள். அப்பாடா! எனக்கு ஒரு கவலை விட்டது.

---

**கேர்ஃப்ரீ பயன்படுத்துவதில் சிரமமோ சிக்கலோ எதுவுமே கிடையாது. இதனாலேயே என் மகளுக்கு எந்த விதமான பிரச்னையும் இல்லை. அதைக் குறித்து நான் சந்தோஷப்படுகிறேன்.**

---

எனக்குக் கிடைக்காத ஒரு சுதந்திரமும் பாதுகாப்பும் கேர்ஃப்ரீ மூலம் என் மகளுக்குக் கிடைத்திருப்பதைப் பார்த்துப் பூரிப்படைகிறேன். ஒரு பெண்தான்—அதுவும் ஒரு அன்னைதான்—என்னுடைய மன உணர்வுகளைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

காலத்தோடு நாமும் மாறியாக வேண்டும். அதுவும் நமக்கு அதிக சுதந்திரமும் பாதுகாப்பும் தருகிற கேர்ஃப்ரீ வடிவிலே அந்த மாற்றம் இருக்குமானால், அதை நாம் வேண்டாம் என்று ஒதுக்குவானேன்?




கிடைக்கிறது. 10 உள்ள பேக் மற்றும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்குகளிலும்
தவிரவும் கிடைக்கிறது. கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ் 10 உள்ள பேக்கில்

*கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்கள்— பூரண சுகம், பரிபூரண பாதுகாப்பு —மாறுகின்ற காலத்துக்கேற்ற மகத்தான வசதி.*

Johnson & Johnson

OBM/5070/R2/TAM

# சீரழிந்து வரும்
# சிதம்பரனார் பூங்கா

தமிழ்நாட்டிலுள்ள பூங்காக்களிலேயே அதிகமான பரப்பளவைக் கொண்டது ஈரோடு நகரத்திலுள்ள வ. உ. சிதம்பரனார் பூங்கா. இதைப் பராமரிப்பதற்காக மட்டும் மொத்தம் இருபத்தேழு பணியாட்கள் இருக்கிறார்கள். அந்த அளவுக்குப் பெரிய பூங்கா.

அத்தனை பணியாட்கள் இருந்தாலும் வேலை நேரங்களில் போய்ப் பார்த்தால் சுமார் பத்து பணியாட்களைக் கூடப் பார்க்க முடியாது. மற்றவர்களெல்லாம் எங்கேதான் போனார்கள்? ''போய்ப் பார்த்தால் ஈரோடு நகராட்சி அலுவலக அதிகாரிகளின் வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருப்பார்கள்!'' என்றார் அங்கே பணிபுரிந்து கொண்டிருந்த பணியாட்களில் ஒருவர்.

இந்தப் பூங்காவில் ஒரு மிருகக்காட்சி சாலை உண்டு. அதில் இல்லாத மிருகங்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். அந்த அளவுக்குப் பெரியது. ஆனால் இப்போது? ஒரு மயில், இரண்டு மான்கள் ஆகியவை மட்டும் தான் இருக்கின்றன. சில ஆண்டுகளுக்கு முன்பு நடந்த தீ விபத்திற்குப் பிறகு அது செப்பனிடப்படவும் இல்லை. கடந்த ஆண்டு வரை இருந்த முயல் குட்டிகள், வெள்ளை எலிகள், கிளிகள், குரங்குகள் ஆகியவையும் இப்போது மாயமாய் மறைந்து விட்டன. விசாரித்த போது அங்குள்ள பணியாட்களும், அதிகாரிகளும் அவற்றை விற்றுவிட்டதாகச் சொல்லிக் கொள்கிறார்கள்.

இப்போதிருக்கும் மயில், இரண்டு மான்கள் ஆகியவற்றுக்கும் தீனி போட ஆள் இல்லை. வயதாகிப் போன ஒரு மான் எப்போது பார்த்தாலும் பட்டினியால் சோர்ந்து போய்ப் படுத்துக் கிடக்கிறது. பூங்காவுக்கு



• ஓடாத ரயில்.



• பசியால் வாடும் மான்.



• குறாய் இல்லாத சுதிப்பிடம்.

• பூட்டிக் கிடக்கும் பூங்கா



• பாதாளக் குழி



• அசுத்தப்படும் தண்ணீர்த் தொட்டி

வருபவர்களில் யாராவது ஆசையோடு கொடுக்கும் பொரி கடலையைச் சாப்பிடுவதோடு சரி. மற்றபடி அவற்றைக் கவனிக்க ஆள் இல்லை.

பூங்காவுக்குள்தான் பெரியார் மாவட்ட மைய நூலகம் இருக்கிறது. நூலகம் காலை எட்டு மணி முதல் இரவு எட்டு மணி வரை திறந்திருக்கும். ஆனால் பூங்காவை மதியம் பன்னிரண்டு மணிக்குப் பூட்டி விடுவார்கள். பிறகு மாலை நான்கு மணிக்குத்தான் திறப்பார்கள். அதனால் மதியம் பன்னிரண்டு மணியிலிருந்து மாலை நான்கு மணி வரை நூலகம் திறந்திருந்தாலும் அதை உபயோகிக்க முடியாது. ஒரு வேளை காலையிலேயே நூலகத்திற்குள் சென்று விட்டவர்கள் புத்தகங்களின் சுவாரஸ்யத்தில் மதியம் பன்னிரண்டு மணிக்குப் பூங்கா பூட்டப்படுவதை உணராமல் இருந்து விட்டால்மீண்டும் அது திறக்கப்படும் நேரமான மாலை நான்கு மணி வரைஉள்ளேயேசிறைப்பட்டுக்கிடக்கவேண்டியதுதான். மிகவும் அவசரமாக வெளியே வர வேண்டியிருந்தாலோ பூங்கா வாட்ச்மேனுக்குச் 'சில்லறை' கொடுத்தால்தான் உண்டு. இந்த நிலையை மாற்றச் சொல்லி எத்தனையோ முறை மனு கொடுத்தும் அவற்றையெல்லாம் உடைப்பில்போட்டு விட்டார்கள் அதிகாரிகள்!

நவீன கழிப்பிடம் ஒன்றும் பூங்காவுக்குள் இருக்கிறது. பெயர்தான் 'நவீன'மே தவிர அதற்குள் குழாய்கள் கூட இல்லை! பிறகு தண்ணீர் எங்கிருந்து வரும்? அதனால் அந்தக் கழிப்பிடத்தின் பக்கமாகச் சென்றால் கூட.

வயிற்றைக் குமட்டிக் கொண்டு வாந்தி வரு கிறது.

நான்கு ஆண்டுகளுக்கு முன்பு சேஷசாயி காகிதத் தொழிற்சாலையினர் சுமார் ஒரு லட்ச ரூபாய்க்கு மேல் செலவு செய்து குழந்தைக ளுக்கான சிறிய ரயில் ஒன்றினைப் பூங்காவுக் குள் அன்பளிப்பாக அமைத்தார்கள். அதைத் தமிழக முதல்வர் எம். ஜி. ஆர்.தான் முதல் வெள்ளோட்டம் விட்டுத் திறந்துவைத் தார். அவர் திறந்து வைத்த இரண்டாவது நாளே அந்த ரயில் தடம் புரண்டு தனித் தனிப் பகுதிகளாகப் பிரிந்து போய் விட்டது. இன்றுவரை அதை யாரும் சரி செய்யவே இல்லை. அதனால் அந்த ரயில் பெட்டிக்குள் இப்போது பெரியவர்களின் 'பலான' காரி யங்கள் நடந்து கொண்டிருப்பதாகச் சொல் லப்படுகிறது.

பூங்காவின் மையப்பகுதியில் ஒரு பெரிய தண்ணீர்த்தொட்டி இருக்கிறது. மதிய வேளை களில் பூங்காவுக்குள் சுவரேறிக் குதித்து, மல, ஜலம் கழிப்பவர்களுக்கென்றே அந்தத் தண்ணீர் பயன்பட்டுக் கொண்டிருப்பது மிகவும் வருந்தத் தக்க விஷயம்!

இவற்றோடு எதற்கும் பயன் படாத வகை யில் ஒரு கிணறும் இருக்கிறது. தரையோடு தரையாக இருக்கும் நாற்பதடி ஆழமுள்ள இந்தக் கிணற்றிலுள்ள தண்ணீர் பாசி படிந்து பார்ப்பதற்கே பயமாக இருக்கிறது. சுற்றுப் புறச் சுவர் ஏதும் சரியாக இல்லாததால் பூங் காவுக்குள் விளையாட வரும் குழந்தைகள் இந்தக் கிணற்றில் தவறி விழவும் வாய்ப்பிருக் கிறது. ஒன்று அதைச் சரியாகப் பராமரிக்க வேண்டும் அல்லது மூடிவிட வேண்டும். இரண்டையுமே ஈரோடு நகராட்சி செய்யா தது ஆச்சரியமாக இருக்கிறது.

இத்தனைக்கும் இந்தப் பூங்காவுக்குள் ஓர் ஆஞ்சநேயர் கோயில் (அறநிலையத் துறைக் குச் சொந்தமானது!) தர்கா ஆகியவை இருந் தும்கூட நகராட்சியினர் கவனிக்காமல் இருப் பதுதான் நமக்கு மேலும் மேலும் வேடிக்கை யாக இருக்கிறது. பூங்கா என்பது மக்களின் ஆரோக்கியத்திற்காகவும், சந்தோஷமான பொழுது போக்குக்காகவும் பயன்படாமல் இப்போது சமூக விரோதிகளுக்காகவும், திறந்தவெளிக் கழிப்பிடமாகவும் பயன் பட்டுக் கொண்டிருப்பது ஈரோடு நகராட்சி யினரின் கேவலமான பராமரிப்புத் திற னுக்கு ஓர் எடுத்துக் காட்டு என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது.

—மேஜர்தாசன்.

படங்கள்: ஈரோடு என். எஸ். மணி.



**பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி**

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் 1542—ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் கும்பகோணம் "ராஜா வேத காவ்ய பாடசாலை"யை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்போது பாட சாலையில் 75 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்துவருகின்றனர். அவர்களுக்கு ஒருநாள் உணவளிக்க சுமார் ரூ. 200/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2000/— மூலதனம் ஏற்படுத்தியோ (அ) அவ்வப்போது ரூ. 200/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் ஸமாராதனை நடத்தும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடைக்கு 80—G விதியின்படி வருமானவரி விலக்கு உண்டு.

விபரங்களுக்கு:

**அத்வைத வித்யாசார்ய மஹாராஜ ஸாஹேப்**
**ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி**
**கும்பகோணம்**

# உடல் உழைப்பு உயர் ஊதியம் தரும்!

நெட்டூர் டெக்னிகல் டிரெயினிங் ஃபௌண்டேஷன் என்று ஒரு நிறுவனம். ஹொக்ஸ் என்கிற ஸ்விட்ஸர்லாந்து நிறுவன உதவியுடன் ஆரம்பிக்கப்பட்டது. இங்கே டூல் அண்ட் டை மேக்கிங் (tool and die making) படிப்பில் டிப்ளமா பயிற்சி தருகிறார்கள். இது மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட படிப்பு.

தற்போது இந்த நிறுவனத்தின் கிளைகள் காட்பாடி (தமிழ்நாடு), தலச்சேரி (கேரளா) பெங்களூர், தார்வார் (கர்நாடகா), விஜயவாடா பக்கத்தில் ஞானுவரம் (ஆந்திரா) ஆகிய இடங்களில் மட்டுமே உள்ளன. நாளா வட்டத்தில் மாநிலத்துக்கு ஒன்று என இந்த டிரெயினிங் சென்டர்களை ஆரம்பிக்கப் போகிறார்களாம்.

இந்தப் பயிற்சியில் சேர ஜாதி மத மாநிலப் பாகுபாடெல்லாம் கிடையாது.

பயிற்சியின்போது 'பெண்டு நிமிர்ந்து விடும்.'

முதல் இரண்டு வருட படிப்புக்குப் பெயர் 'பேஸிக்'. மூன்றாவது, நாலாவது வருடங்களில் ப்ரொடக்ஷன் பிரிவில் பயிற்சி.

ஆங்கிலம்தான் பயிற்றுமொழி.

காட்பாடி, தலச்சேரி போன்ற இடங்களில் இரண்டு வருஷ படிப்புச் சொல்லிக் கொடுத்துவிட்டு, மாணவர்களை மூன்றாவது வருஷ படிப்புக்குத் தார்வாருக்கு மூட்டை கட்டி அனுப்பிவிடுவார்கள். 'தார்வாரில் தூரத்துச் சொந்தக்காரர்கூட இல்லையே! எங்கே தங்கிப் படிப்பது?' என்கிற கவலை இருந்தால் அதற்கு டாட்டா காட்டிவிடலாம். தார்வாரில் ஹாஸ்டல் வசதி உண்டு. தார்வாரில் இங்கிருந்து போகிறவர்களின் முக்கியமான பிரச்னை மொழி. ஆனாலும் பரவாயில்லை. சொல்ப தினதல்லி கன்னடா கலி பருது.

தார்வாரில் படிக்கிற ஒரு தமிழ்நாட்டு மாணவர், 'எப்போடா ஊர் திரும்புவோம் என்று இருக்கிறது! ஒரு தமிழ் சினிமா பார்க்கக்கூட வழி இல்லை!' என்று அங்கலாய்க்கிறார்.

சரி, அது போகட்டும். பயிற்சி முடிந்ததும் அடுத்த கேள்வி— "நான் சர்ட்டிஃபிகேட்டை வைத்துக் கொண்டு எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச் வாசலில் எத்தனை வருடம் தவமிருக்க வேண்டும்?"

உங்களுக்குக் கிடைக்கிற பதில்: "அதற்கு அவசியமே இருக்காது. உடனே வேலை கிடைத்து, குறைந்தது ஆயிரம் ரூபாயாவது எதிர்பார்க்கலாம்!"

'ஓ.கே.! எனக்கு இந்தக் கோர்ஸ் படிக்க ஆசை. சேர என்ன தகுதி' என்கிறீர்களா?

வெறும் எஸ். எஸ். எல். ஸி. போதும். ஆனால் இவர்கள் வைக்கிற டெஸ்ட்டில் தேற வேண்டும்.

டெஸ்ட் எப்படி இருக்கும்?

வேறு எப்படி? வழக்கம்போல ஆங்கில அறிவு, கணித அறிவு, தவிர ஞாபக சக்திக்கு ஒரு டெஸ்ட், ஒரு பொருளைக் குறிப்பிட்ட கோணத்தில் வரைதல், எட்செட்ரா.

ஆயிரக்கணக்கில் விண்ணப்பங்கள் குவிகின்றன. டெஸ்ட் சல்லடையில் சலித்து, குறைந்த எண்ணிக்கையில் அட்மிஷன் தருகிறார்கள்.

வழக்கமாய் ஜூன், ஜூலையில் ஹிந்து, டெக்கான் ஹெரால்டில் விளம்பரம் வருமாம். பார்த்து அப்ளை பண்ணுங்களேன்.— பெண்களும் கூடத்தான்!

— சந்திரமௌலி

## எதிர்காலம் உங்கள் கையில்



# குதிரை வீரன் சிலை அகற்றப்பட வேண்டுமா?



குதிரை வீரன் சிலை புகைப்படம்: சுபா.

சென்னை அண்ணா மேம்பாலத்தின் அடியில் இருக்கும் குதிரை வீரன் சிலையை அகற்ற வேண்டும் என்று சொல்லியிருக்கிறார் ப. உ. சண்முகம். இதுபற்றிச் சிலர் கருத்துச் சொல்கிறார்கள் :

* "இன்றைக்குச் சென்னை நகரம் முழுவதிலும் முள்ளவற்றில், மிகவும் கம்பீரமான, அழகான சிலைகள் இந்தக் குதிரை வீரன் சிலையும், மன்றோ சிலையும்தான். எனவே என்ன காரணமானாலும், இந்தக் குதிரை வீரன் சிலைகளை அகற்றவே கூடாது!"

—வசந்தி வாசுதேவன்.

* "தான் மந்திரியாய் இருந்த போது, தனக்குத் தெரியாமலேயே ரேஸ் ஒழிப்பு சம்பந்தமான வாசகம் இந்தச் சிலைகளின் பீடத்தில் பொறிக்கப்பட்டதாய் ப.உ.ச. கூறுகிறார். அப்போதே இது சம்பந்தமான தனது எதிர்ப்பைத் தெரிவித்து ஏதாவது செய்திருக்கலாமே! ஏன் இவ்வளவு நாள் சும்மா இருந்துவிட்டு இப்போது சிலை அகற்ற வேண்டுமெனச் சொல்கிறார்? பதவி சுகம்தானே! தூக்கி எறியப்பட வேண்டியவர்கள் இவர் போன்ற அரசியல்வாதிகள்தானே தவிர குதிரை வீரன் சிலைகள் இல்லை!"

—சிவசங்கரன்.

* "இன்று தொடர்ந்து நடந்து கொண்டிருந்தாலும், கருணாநிதி 1974-ல் மக்களைச் சீரழிக்கும் குதிரை ரேஸை ஒழிக்க ஒரு முயற்சி எடுத்தது ஒரு சரித்திர உண்மை. இந்தச் சிலைகள் அந்த முயற்சிக்கு ஒரு நினைவுச் சின்னம். இந்தச் சிலையை எடுப்பது, சரித்திரத்தின் பக்கங்களை அழிக்கிற முயற்சி. அது தவறான செயல் என்பதற்குக் கருத்து வேறுபாடே இருக்காது. இருக்கவும் முடியாது.

—ஹேமலதா.

* அந்தச் சிலையை கருணாநிதி வைத்தார் என்கிற ஒரே காரணத்துக்காக இன்று ப.உ.ச. சிலையே கூடாது என்கிறார். அதற்குச் சப்பைக் கட்டு கட்டுகிறார். அதை அகற்றுகிற நடவடிக்கைகளில் ஈடுபட்டால், தி. மு. க. வினர் கூடி மறியல் பண்ணுவார்கள். அ. தி. மு. க. அரசு அவர்களைக் கைது செய்யும்; வன்முறை நிகழும்; பொதுச் சொத்து அழியும்; வீண் விளைவுகள்; இதெல்லாம் தேவைதானா? ப.உ.ச. சிந்தித்துப் பார்க்க வேண்டும்!

—டி. கே. சம்பத்.

* ராஜாஜி முதல்வராய் இருந்தபோது, கொடுங்கோலனான 'நீல்' சிலையை அகற்ற வேண்டுமெனப் பொது மக்களிடையே ஓர் அபிப்பிராயம் உருவானது. எதிர்ப்பு உச்சமடைந்து, சிலையை உடைத்துவிடவும் மக்கள் நாள் குறித்து விட்டனர். கம்பீரமான, அந்தச் சிலை — அது ஒரு மக்களின் வெறுப்புக்கு ஆளானவருடையதாய் இருந்தாலும் — அது அழகான கலைப் படைப்பு என்று கருதின ராஜாஜி, இரவோடு இரவாகச் சிலையைப் பெயர்த்தெடுத்துக் கொண்டு போய், மியூஸியத்தில் வைத்துவிட்டார். ஆனால் இன்றைய சூழ்நிலை என்ன? குதிரை வீரன் கொடுங்கோலனுமில்லை; மக்கள் அதை வெறுக்கவுமில்லை. பிறகு ஏன் அகற்ற வேண்டும்?

—சுதா.

* இப்போதுள்ள குதிரை வீரன் சிலைகளை அகற்றிவிட்டு, ஒன்றுக்கு இரண்டாய் எம்.ஜி.ஆர். சிலையைவைக்கத்திட்டமிட்டிருக்கிறாரா ப. உ. சண்முகம்? இப்போது எம். ஜி. ஆருக்குச் சிலைகள் இல்லை என்கிற குறையைத் தீர்த்து வைத்து, எம்.ஜி.ஆர். மீதுள்ள நன்றி விசுவாசத்தைக் காட்ட நினைக்கிறாரா? என்றுதான் கேட்கத் தோன்றுகிறது இந்தச் செய்தியைப் படிக்கும்போது.

—எஸ். சிவகுமார்.

தொகுப்பு : மௌலஷ்மி.



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

# வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.

# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் அபூர்வமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று, துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத் துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும் பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல் துலக்குவதால் புத்துணர்ச்சி தரும் தூய சுவாசமும், வலிமை மிகுந்த ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




584.55 Tam

*கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்*
*பெப்பர்மென்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது!*

REGISTERED No. 4397
Registered as a Newspaper in Sri Lanka

Interpub/APL/9/85

# A new strength emerges

The pioneer manufacturers of dyestuffs in India, Atul diversified into basic chemicals, dyestuffs intermediates, pesticides and pharmaceuticals ... products which are relied upon by a great many diverse industries.

Collaborations with American Cyanamid of USA, ICI of UK and Ciba-Geigy of Switzerland keep Atul updated with international expertise—which is effectively adapted through in-house R&D.



In the spirit that pervades a new, dynamic India — Atul faces the challenges of future expansion with strength and confidence.



**THE ATUL® PRODUCTS LTD.**

Atul 396 020, Gujarat, India